உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தமிழ்ச் சிவஞானபோதம் முதல் நூலா? வழி நூலா...?



ஸ்ரீமத் மெய்கண்ட தேவநாயனர்



ஆக்கியோன்
த. சி. ச. ராமச்சங்குப்பாண்டியன்
திருமந்திரநகர்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தமிழ்ச் சிவஞானபோதம் முதல் நூலா? வழி நூலா...?



ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள்

ஆக்கியோன்
த. சி. ச. ராமச்சங்குப்பாண்டியன்
திருமந்திரநகர்

# முன்னுரை . . .

என் இயற்றமிழ் ஆசிரியர் உயர்திரு. பண்டித ஆ. சிவசுப்பிரமணியஅய்யர் அவர்கள் சிவஞான போதம் மொழிபெயர்ப்பல்ல என்ற கொள்கை தற்காலத்துப் பிறந்துள்ளதையும் அதனால் ஏற்படும் விளைவுகளையும் அறிவுறுத்தினார்கள். பிரசார தந்திரத்தால் ஒரு பொய்யைப் பல தடவை மீண்டும் மீண்டும் கூறுவதால் அதுவும் உண்மையோ என்னும் ஒரு பிரமையை உண்டாக்கலாம் என்ற கருத்தால் ''மொழிபெயர்ப்பல்ல'' என்பது மீண்டும் மீண்டும் கூறப்பட்டது.

சித்தாந்தத்தை நேரடியாக மறுத்தற்கு விருப்பமில்லாத ஒரு சாரார் மறைமுகமாக வீழ்த்தற்கு வழி தேடினர். அவர்களது கண்டுபிடிப்பே ''மொழி பெயர்ப்பல்ல'' என்ற சுலோகம். ஆகம மூலத்திலிருந்து தனிமைப்படுத்தினால் வலிகுன்றும் என்பது அவர்கள் கருத்து. வேற்றுச் சமயத்தாரின் தந்திரத்தை உணராது சைவப்போர்வையைப் போர்த்த ஒரு சாரார் அதனை வலியுறுத்தப் பற்பல கற்பனைகளைக் கையாள ஆரம்பித்தனர். தமிழர் அறிவில், பண்பாட்டில், அநுபவத்தில் மலர்ந்த சமயம் என்று ஒரு கூட்டத்தாரும், திருமுறைகளின் பிழிவே சித்தாந்தம் என்று ஒரு கூட்டத்தாரும் கூறத் தலைப்பட்டனர்.

எனினும் அறிவில், பண்பாட்டில், அநுபவத்தில் மலர்ந்தது என்பதற்குத் திருத்தொண்டர் புராணத் தொண்டர்களையே எடுத்துக் காட்டாகக் காட்டி மகிழ்வர். சித்தாந்த சாத்திரமாகிய திருக்களிற்றுப் படியாருள்,

> ''மெல்வினையே யென்ன வியனுலகி லாற்றரிய
> வல்வினையே யென்ன வருமிரண்டுஞ் - சொல்லிற்
> சிவதன்ம மாமவற்றிற் சென்றதிலே செல்வாய்
> பவகன்ம நீங்கும் படி'' (செய்-16)

என்று கூறப்பட்டுள்ள அறிவுரையை அவர்கள் அறியார்கள். எனவே திருத்தொண்டர் செயலெல்லாம் வல்வினை என்றும் சோபான முறையிற் சரியை ஆதியாகச் செய்யும் செயலெல்லாம் மெல்வினை என்றும் அடுத்த செய்யுளில் நம்மனோர்க்கு உரியது மெல்வினையே என்றும் கூறியதால் அவ்வுதாரணங்கள் நம்மனோர்க்குப் பொருந்தா என்பதையும் அறியார். ''ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார்'' என்பது அவருக்கே உரிய சிறப்பு. அதனையும் கூறி மகிழ்வர். ஆயின் ஈராண்டில் திருமுறைகளை கற்பதோ பிழிவதோ அசம்பவமாகுமே என்பதை ஓரார்! என்னே கலியின் கொடுமை!

ஆயினும் அவர்கள் சிவஞான போதத்துள் உண்மையதிகாரத்துட் கூறப்பட்டவைகள் பற்றி மவுனஞ் சாதிப்பர். தீக்கை பெற்றுச் சமய ஒழுக்கத்தைக் கைகொள்ளும் மனவலி இன்மையான் திருத்தொண்டர் புராணத்துள் தீக்கை கூறப்படவில்லை என்று கூறி மகிழ்வார். எனவே சிவஞான போதத்துள் தீக்கைப் பேற்றையும் அதனல் விளையும் பயன்களையும் அவர்களால் செரித்துக் கொள்ள முடியவில்லை. எனவே மவுனம்! சிவஞான போதத்திற் கூறப்பட்ட சாதனங்களைப் பின்பற்றி ஆன்ம முன்னேற்றத்திற்காகச் செயலாற்றப்படவில்லை. எனவே இவ்வாறன வெறும் பிரசாரத்தினுல் பலருக்குச் சித்தாந்தத்தில் ஐயமேற்படும் நிலையே ஏற்பட்டது.

உண்மை என்றும் நிலைத்து நிற்கும் என்பர். பொன்னும் காலத்தில் ஒளிகுன்றி மெருகேற்றப்படுகின்றது. எனவே உண்மையும் விளக்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. ''சிவஞான போதம் முதனூலா? வழிநூலா?'' என்னும் இச்சிறு நூல் வெளிவர இதுவே காரணம். இவ்வாராய்ச்சிக்கு உறுதுணை செய்தவர்கள் உயர்திரு சித்தாந்த பண்டித பூஷணம் பேட்டை ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்கள்.

எனவே என்னை இவ்வழியில் ஈர்த்த என் இயற்றமிழ் ஆசிரியர் ஆ. சிவசுப்பிரமணிய அய்யர் அவர்கட்கும் உறுதுணையாகிய உயர்திரு ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்கட்கும் அவர்கள் நினைவாக இச்சிறு நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.

காய்தல் உவத்தலின்றி ஆயும் அன்பர்களுக்கு இந்நூல் மிகவும் பயன்படும் என்பது நிச்சயம்.

20. தந்தி ஆபிஸ்ரோடு, தூத்துக்குடி-1.

த. சி. ச. இராமச்சங்குப் பாண்டியன்



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தமிழ்ச் சிவஞான போதம் முதனூலா ? வழிநூலா . . ?

மெய்கண்ட சந்தான பரம்பரையினரும் பாடியகாரருமாகிய மாதவச் சிவஞான யோகிகள் தமிழ்ச் சிவஞான போதத்தை மொழி பெயர்ப்பெனக் கூறியுள்ளார்கள். அவ்வாக்கு ஆப்த வாக்காகலின் ஆகம அளவையாகி மேலான பிரமாணமாகின்றது. எனவே அவ்வொன்றைக் கொண்டே மொழிபெயர்ப்பென்பதைத் துணியலாம். எனினும் தமிழ்ச் சிவஞான போதம் ''முதல் நூலே; மொழி பெயர்ப்பல்ல'' என்பார் கூற்றுப்பற்றி மொழி பெயர்ப்பு என்பது பொருந்துமோ இல்லையோ என்னும் ஐயப்பாடுடையார் விபரீதத்தின் கண் வீழாமைப் பொருட்டு இவ்வாராய்ச்சியும் வேண்டப்படுகின்றது.

முதற்கண் தமிழ்ச் சிவஞான போதம் வழிநூலா முதனூலா என்பதை ஆராய்தல் இன்றியமையாதது. தமிழ்ச் சிவஞான போதம் மெய்கண்ட தேவநாயனாரால் செய்யப்பட்டது. அவரது நேர்மாணவர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள். அவர் தம்மாசிரியரின் ஆணைப்படியே சிவஞான சித்தியார் என்னும் நூலைச் செய்தருளினர். அந்நூல் சிவஞான போதத்திற்குச் செய்யுள் வடிவ விளக்கமாகும். இவை எல்லாம் எல்லோரும் உடன்பட்ட செய்திகளே. எனவே சிவஞான சித்தியார் மெய் கண்ட தேவ நாயனாரின் கருத்துக்களைப் பிரதிபலிப்பதாய் அமைதலும் அதனை மெய்கண்ட தேவ நாயனாரின் கருத்தென்று கொள்ளுதலும் பொருத்தமுடையதாகும். அருணந்தி சிவாசாரிய சுவாமிகள்.

''அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினு
   னளப்பரிதா மப்பொருளை யரனருளா லணுக்கள்
தருவர்பின் றனித்தனியே தாமறிந்த வளவிற்
   றர்க்கமொடுத் தரங்களினுற் சமயஞ்சா தித்து
மிருதிபுரா ணங்கலைகண் மற்று மெல்லா
   மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம்வே தாங்கஞ்
கருதிசிவா கமமொழியச் சொல்லுவதொன் றில்லை
   சொல்லுவார் தமக்கறையோ சொல்லொ ணாதே''

(சித்தி: சூ 8. செய் 14)

என்றருளிச் செய்துள்ளார்கள்.

இதன் பொழிப்பாவது, ''நூலெனப் படுவன வெல்லாமொரு நிகரனவாதலன்றி முதனூல் வழிநூல் சார்புநூல் பூருவபக்க நூலெனப் பலவேறு வகைப்பட்டு மேன்மேன் நூல்களை நோக்கிக் கீழ்க்கீழ் நூல்கள் மென்மையுடையனவாம்; அவற்றுள் ஏனைச் சமய நூல்களெல்லாம் முதனூலாகிய வேதாகமப் பொருளை முழுவதுமுணர மாட்டாதார் அவற்றுட் சில பொருளைச் சமுத்திர கலச நியாயம் பற்றி ஆண்டாண்டு எடுத்துக் கொண்டுத் தத்த மறிவிற்கேற்பத் தொகுத்தும் விரித்துஞ் செய்த நூலாகலான் அவையெல்லாம் பூருவபக்க நூலெனப்படும். சமய நூலல்லவாகிய மிருதி புராணங் கலைகள் மற்று மென்பதனுற்றழுவப்படும். உபாகம முதலாயினவெல்லாம் அவ்வேதாகமப் பொருளை உள்ளவாறுணர்ந்தோர் அவற்றைப் பிறர்க்கு இனிது விளக்குதற் பொருட்டு நால்வகை யாப்பினுளொன்ருன் வழிப்படுத்துச் செய்த நூலாகலான் அவை வழிநூலெனப்படும். ஏனைக் காருடந் தக்கிண முதலிய வாகமங்களுஞ் சிக்கை கற்ப சூத்திர முதலிய வேதாங்களு முறையே யவ்விரண்டனையு முள்ளவாறுணர்தற்குச் சார்பாய்ப் புடைப்பட்டு நிகழ்தலின் அவை சார்பு நூலெனப்படும். இவ்வாறன்றி வேதாகமங்களினடங்காத பொருளா யொன்றனை யெடுத்துக் கொண்டு சுதந்தரமாய்ச் செய்யு நூலொன்றுமில்லை. உண்டென்று சொல்லிப் பிணங்கும் பேதைகள் என் கடவர்'' என்பதாம்.

எனவே வேதமும் ஆகமமும் முதனூல் என்பதும், ஆன்மாக்கள் செய்வன வழிநூல், சார்புநூல், பூருவபக்க நூல் என்பவற்றுள் ஒன்ருய் அமைவதன்றி முதனூலாக அமைய இயலாதென்பதும் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் கருத்தென்பது நன்கு விளங்கும். அவர்தங் கருத்தும் அவராசிரியர் உபதேசப்படி அமைந்ததாகலின் அக்கருத்து மெய்கண்ட தேவநாயனுர் கருத்தேயாகும் என்பதும் பெறப்படும். படவே மெய்கண்ட தேவ நாயனுர் தம்நூலைச் சிலர் முதனூலெனக் கூறுவதை உடன்படவில்லை என்பதும் அவ்வாறு கூறுவோர் பேதைகள் என்பதை உடன்பட்டவர் என்பதும் பெறப்படும். எனவே தமிழ்ச் சிவஞான போதம் முதனூலென்பது பேதைகள் கூற்ருய் முடியும்,

இவ்விடத்து முதனூல் ஒன்றெனவே அமையும்; வேதம், ஆகமம் என இரண்டைக் கொள்ளுதல் பொருந்துமோ என்னும் ஐயம் எழும். ஐயத்தை அறுத்தற் பொருட்டும் சித்தாந்தத்தை நிலை நாட்டற் பொருட்டும் அடுத்த செய்யுளுள் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள்,

வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லனாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலா

நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னெழிபொருள்வே தாந்தந்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்.

(சூ:8 செ:15)

என்றருளினுர்கள்.

இதன் பொழிப்பாவது, வேதஞ் சிவாகம மிரண்டும் ஏனை யோர் செய்யப்படும் வழிநூல் சார்புநூல் பூருவ பக்க நூல்களி னென்ருக வைத்தெண்ணுதற்கு ஒருவாற்ருனுமியைபின்றி அவை யனைத்திற்கு முதனூலாகிய அநாதி முத்தனுகிய இறைவனுல் தரப்படு நூலாக ஏனையவெல்லாம் இவையிரண்டினும் விரிந்த நூல்களாதலின் இவ்விருவகை நூலுமே நூலென்று பார்த்துக் கூறப்படுவனவாம். அற்றேல் முதல்வனுற்றரப்படு முதனூலே ஒன்ருக வைத்தெண்ணுமல் இங்ஙன மிருவகைப்படுத்தெண்ணியது என்னையெனின், அஃதொக்கும். முதல்வன் பெருங் கருணையாளனுகலின் உலகத்தாருய்தற் பொருட்டுஞ் சத்திநிபாதமுடையா ருய்தற் பொருட்டுந் திருவுளத்திற் கருதிப் பொருள்பலபடத் தோன்றுஞ் சூத்திரமும் அதனையவ்வாருகவொட்டாது தெளித்துரைக்கும் பாடியமும் போல வேறுவைத் தெண்ணப்பட்டன. இங்ஙனம் வேதத்திற் கூறுங் கரும காண்டப் பொருள்கட்கு இன்றி-யமையாது வேண்டப்பட்டெஞ்சி நின்றனவாய பொருள்களையும் வேத முடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக் கொண்டு இனிது விளக்குவது சிவாகமங்களாகலான், இதனின் வேருய வேதத்தின் பூருவ பக்கப் பொருளைச் சொல்லு மேனை நூல்க ளெல்லாம் பூருவபக்க நூலெனவும் அதன் சித்தாந்தப் பொருளைச் சொல்லுவதாகிய சிவாகமஞ் சித்தாந்த நூலெனவுமா மென்பதாம்'' என்பதாகும்.

இச்செய்யுளால் எல்லாம் வல்ல சிவபெருமான் வேதம், ஆகமம் என இரு வேறு வகைப்படுத்திச் செய்த காரணத்தையும் ஆகமம் சிறப்பு முதனூலாதற்குக் காரணத்தையும் விதந்துரைத்தார்.

எனவே மேற்கண்ட இரு செய்யுட்களாலும் சித்தாந்தமல்லாத ஏனைச் சமய நூல்களெல்லாம் பூருவபக்க நூலாகும் என்பதும் சித்தாந்தத்தைக் கூறும் சிவாகமங்களே சிறப்பு முதனூலாகும் என்பதும் வலியுறுத்தப்பட்டன.

அன்றியும் ''அளப்பரிதா மப்பொருளை அரன் அருளால் அணுக்கள் தருவர்'' என்றும், ''பின் தனித்தனியே தாமறிந்த அளவில் தர்க்கமொடு உத்தரங்களினுல்... மற்றும் எல்லாம் மெய்ந்நூலின் வழிபுடையாம்'' என்றும் கூறினமையின், அணுக்களாகிய ஆன்மாக்-களாற் செய்யப்படும் நூல்களெல்லாம் வழிநூலாகவும் புடை நூலாகவும்

ஆவதன்றி முதனூலாக இயலாது என்பது பெறப்படும். ஆகலின் தர்க்கமொடு உத்தரங்களினுல் செய்யப்பட்ட தமிழ்ச் சிவஞான போதம் வழிநூலென்பதே வலியுறுத்தப்பட்டதாயிற்று.

ஆயினும் தமிழ்ச் சிவஞான போதத்தை வழிநூல் என விதந்தெடுத்துக் கூருமையின் இவ்வொரு நூல் விலக்காகும் எனப் பிணங்குவாருமுளர். அங்ஙனம் பிணங்குவார் மயக்கம் நீங்கும் பொருட்டுப் பரபக்கத்துள் ''போதமிகுத்தோர்'' என்னுஞ் செய்யுளுள், ''குவலயத்தின் அவ்வழி யெங்குரு நாதன் கொண்டு தீதகல எமக்களித்த ஞான நூலே'', என்னும் பகுதியான் விளக்கியுள்ளார்.

மேற்கண்ட பகுதியுள் ''குவலயத்தின்'' என்றமையான் முதனூல் வழங்கி வந்த இடம் கைலாயம் என்பதும் அந்நூல் இக்குவலயத்தில் வழங்கப்படவில்லை என்பதும் பெறப்படும். ''அவ்வழி'' என்றமையான் கைலாயத்தின் வழங்கி வந்த சிவஞான போதத்தின் வழிநூலே தமிழ்ச் சிவஞான போதம் என்பதும் பெறப்படும். (அகரச் சுட்டு தலைமை பற்றி வந்தது). எனவே மெய்கண்ட தேவநாயனுர் செய்தருளியது வழிநூலே என்பது அவர் மாணவராகிய அருணந்தி சிவாசாரிய சுவாமிகளின் திருவாக்கான் நன்குணரப்படும்.

எனினும் வேதங்கள் தமிழிலிருந்து வடமொழிக்கு மொழி பெயர்க்கப்பட்டன வென்றும் அவ்வாறு மொழிபெயர்க்கப்பட்ட பின் தமிழ் வேதங்கள் கடலாற் கொள்ளப்பட்டன வென்றும் தம்மையே சான்ருக்கிக் கூறுவாரும், திருக்குறளே வேதம் திருமந்திரமே ஆகமம் என உய்த்துணர்ந்து கூறுவாரும் எனப் பலதிறப்படுவர் காழ்ப்புணர்ச்சியுடையோர். அவர்களும் தம்முள் மாறுபட்ட கருத்தினராகலின் அவர்கள் கூற்றெல்லாம். ''உடங்கியைந்து தம்மிற் புணராமை கேளாம் புறன்'' என்னும் மெய்கண்ட தேவநாயனுர் வாக்குப்பற்றித் தள்ளப் படுவதாகும்.

ஆயினும் அவ்வுரை பற்றி வேதாகமங்கள் வடமொழியோ தென் மொழியோ என்னும் ஐயம் ஏற்படலாம். எனினும் அவருள் ஒரு சாரார் ஆகமமெனக் கொண்ட அத்திருமந்திரத்துள், ''ஐம்ப தெழுத்தே யனைத்து வேதங்களும்—ஐம்ப தெழுத்தே யனைத்தாக மங்களும்'' எனத் தெளிவாகக் கூறப்பட்டிருத்தலினுலும் வடமொழிக்கே ஐம்பது எழுத்துக்கள் உண்மையாலும் வேதாகமங்கள் வடமொழி என்பது தெற்றெனப் புலப்படும். எனவே தம்மையே சான்ருக்குவார், உய்த்துணர்வார் முதலியோர் கூற்றெல்லாம் ''ஆகாயத் தாமரை'' ''ஆமை மயிர்க் கம்பளம்'' என்பன போல இல்பொருள் உவமைக்கு எடுத்துக்காட்டாய் அமைந்து கானல் நீராய் மறையும்.

இனி அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் அளவையியலுள் பத்து வகைப்பட்ட அளவைகளைக் கூறி அவற்றை உடன்பட்டார். அவற்றுள் ஐதிகம் என்பதும் ஒன்று. ஐதிகம் என்பது சந்தான பரம்பரையாய் வருஞ் செய்தியே ஆகும். எனவே அது பிரமாணமாகக் கொள்ளப் பட்டது. எனவே ''ஆசிரியர் சிவஞான சுவாமிகள் ஐதிக வரலாற்றைத் தான் கேட்ட முறையாகவே தமது நூலிற் குறித்துவிட்டார்'' என்று கூறுவோர் கூற்றின்கணுள்ள இழிவு போலியாய் முடியும். மேலும் மெய் கண்ட தேவநாயனுர் முதலாக அச்சத்தான பரம்பரையில் வரும் ஐதிகம் பிரமாணமாதலும் சரித்திரமாதலும் உணரப்படும். ஆயின் திருமந்திரத்-திற்கு ''ஸ்ரீ மந்த்ர மாலிகா'' என்பது முதல்நூல் என்பாரும், பெரிய புராணத்திற்கு ''உபமன்யு பக்த விலாசம்'' என்பது முதனூல் என்பாரும் கூறும் கூற்றுக்கள் எல்லாம் உரிய ஆசிரியரை முன்னிட்ட சந்தான பரம்பரையாக வருஞ் செய்திகளாக இல்லாமையின் அவை யெல்லாம் ஐதிகப் பிரமாணம் ஆகமுடியா. இவ்வாறு பிரமாணமிவை அப்பிரமாண மிவை எனப் பகுத்துணர மாட்டாதார் மயங்கிக் கூறுவன வெல்லாம் ''அவ்வளவின் அவன் மகிழ்க'' என்னும் நியாயம் பற்றித் தள்ளப்படும்.

அங்ஙனமன்று சிவஞான போத ஆராய்ச்சி (கழகப்பதிப்பு-1971) என்னும் புத்தகத்தில் மெய்கண்ட தேவர் காலத்தில் வழங்காத இரண்டு செய்திகள் புதியவாகச் சிவஞான சித்தியார் காலத்தே உண்டாய் விட்டமை தெளியக் கிடக்கின்றது'' (பக்-267) என்றும், ''சிவஞான போதப் பாயிரத்தில் நுவலப்படாத இறைவனையுஞ் சனற் குமாரரையும் அருணந்தியார் யாங்ஙனங் கண்டனரோ அதற்குச் சான்றேதுங் கண்டிலம்'' (பக்-268) என்றும், ''இன்னுஞ் சிவஞான சித்திப் பாயிரத்திற் காணப்படாத சத்தியஞான தரிசனிகளையும் பரஞ் சோதி முனிவரையும் உமாபதி சிவனுர் யாங்ஙனம் கண்டனரோ அதற்குஞ் சான்றேதுங் காண்கிலம்'' (பக்-268) என்றும், ''மெய் கண்ட தேவர்க்கு அதனை அறிவுறுத்திப் போன முனிவர் பெயர் மெய்கண்ட தேவர்க்கே தெரியாமையாற் போலும் அவர் அதனைத்தமது நூலுள் யாண்டுங் குறிப்பிட்டிலர்'' (பக்-265) என்றும், ''அருணந்தி யாரோ வடமொழியாளரின் மதத்தின் பாலராய் இறைவனே அதனை நந்தியெம் பெருமானுக்கு அருளிச் செய்தாரென வொரு பொருந்தா வுரை புனைந்துவிட்டார்'' (பக்-265) என்றும் ''இன்னும் மெய்கண்ட தேவரோ தம்மாசிரியர் இன்னுரெனத் தாம் வகுத்த சிவஞான போத நூலுள் யாண்டும் எடுத்தோதாமையான் அந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் கூறினுரும் மெய்கண்ட தேவர்க் கதனை யுணர்த்தினர் இன்னுரெனக் கிளவாராய் வாளா நந்தி முனி கணத் தளித்த உயர் சிவஞான போத முரைத்தோன் என வாய்மையே கூறினர். பட்டாங்கு கிளந்த இம் மெய்யுரைக்கு மாறுக அருணந்தியார் சிவஞான போதப் பொருளை மெய்கண்ட தேவர்க்குணர்த்தினவர் சனற்குமாரர் எனக் கூறியது தமிழாசிரியராகிய மெய்கண்ட தேவர் கூர்ந்து கண்டபொருளை வட

மொழியாளர்க்கு உரிமையாக்குதற் பொருட்டுச் செய்த சூழ்ச்சிப் புனைவுரையேயாம்; அதனால் அருணந்தியாருரை கொள்ளற் பாற்றன்றென விடுவிக்க'' (பக்-266) என்றும் கூறப்பட்டுள்ளமையின் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளின் கூற்றுக்களைக் கொள்ள இயலுமோ என அவரது கருத்துப் பரம்பரையினர் வினவலாம். எனவே ஆராய்ச்சி யுடையார் கூற்றுக்களை ஒவ்வொன்றாகக் காணலாம்.

(1) ''மெய்கண்டதேவர் காலத்தில் வழங்காத இரண்டு செய்திகள் புதியனவாகச் சித்தியார் காலத்தே உண்டாய் விட்டமை தெளியக் கிடக்கின்றது'' என்றார் ஆராய்ச்சியுடையார்.

ஆராய்ச்சியுடையார் ''இற்றைக்கு 700 ஆண்டுகட்கு முன்னிருந்த மெய்கண்ட தேவர்'' (பக்-240) எனக் கூறுமாற்றான் ஆராய்ச்சியுடையார்க்கும் மெய்கண்ட தேவநாயனார்க்கும் இடைப்பட்ட காலம் ஏழு நூற்றாண்டுகள் என்பது பெறப்படும். ஆனால் மெய்கண்ட தேவநாயனாரும் அருணந்திசிவாசாரிய சுவாமிகளும் குருவும் மாணவரு மாகலின் சமகாலத்தவர் என்பதை ஆராய்ச்சி யில்லாதாரும் உணர்ந்து கொள்ள இயலும். எனினும் ஆராய்ச்சியுடையார், ''மெய்கண்டதேவர் காலம்'' என்றும் ''சிவஞான சித்தியார் காலம்'' என்றும் கூறுமாற்றான் இருவருக்கும் இடைப்பட்ட காலம் சில பல நூற்றாண்டுகள் போல ஒரு பொய்த் தோற்றத்தை உண்டாக்குகின்றார். இவ்வாறு காலவேறுபாடு இருப்பது போலக் கூறியது உண்மையைத் திரித்துக் கூறுதலாகும். எனவே ''மெய்கண்டதேவர் காலத்தில் வழங்காத இரண்டு செய்திகள்'' என்பதும் உண்மைக்குப் புறம்பானதாகும்.

(2) ''சிவஞானபோதப் பாயிரத்தில் நுவலப்படாத இறைவனையுஞ் சனற்குமாரரையும் அருணந்தியார் யாங்ஙனங் கண்டனரோ அதற்குச் சான்றேதுங் காண்டிலம்'' என்றார் ஆராய்ச்சியுடையார்,

ஆராய்ச்சியுடையார், ''சிவஞான போதத்திற்குப் பாயிரச் செய்யுள் எழுதிச் சேர்க்கப்பட்ட காலம் அந்நூலாசிரியரான மெய்கண்ட தேவர் சிவபிரான் றிருவடி நிழல் எய்தியதற்குத் பிற்பட்டதாகும் என்பது ஆராய்ச்சியாற் புலனாகின்றது'' (பக்-271) என்று முடிவு கட்டினார். அவரே, ''அதன்பின் மெய்கண்டார் தாம் அருளிச் செய்த நூலை அருணந்தியார்க்கு அளித்து அதன் பொருள் முற்றும் அவர்க்குத் தெரிந்தெடுத் தறிவுறுத்தி இச்சிவஞான போத நூலுக்கு ஒரு வழிநூல் செய்திடுக என்று கட்டளையுந் தந்தருளினார். அருணந்தியார் அக் கட்டளையினைத் தம் முடிமேல் ஏற்றுச் சிவஞான போதத்திற்கு விரிந்த ஒருரை போலச்சிவஞான சித்தியார் எனப்பெயரிய சிறந்த வழிநூலை இயற்றி.................. வழங்கச் செய்தார் ''(பக்-285) என்றார். எனவே அவரது ஆராய்ச்சியால் சிவஞான போதப் பாயிரம் மெய்கண்ட தேவநாயனார் காலத்திற்குப் பிற்பட்டது என்பதும் சிவஞான சித்தியார்

மெய்கண்டதேவ நாயனுர் காலத்தில் அவர் தம் ஆணைப்படிச் செய்யப் பட்டதென்பதும் பெறப்பட்டன. எனவே சிவஞான சித்தியார் காலத்தால் முந்தியதும் சிவஞான போதப் பாயிரம் காலத்தால் பிந்தியதும் என்றேற்படுகின்றது அவரது ஆராய்ச்சியால்!

பொதுவாகக் காலத்தால் முன்னையதைக் கொண்டுப்பின்னையதை ஆராய்வதே அறிவுடையோர் கொள்கையாகும். ஆனுல் ஆராய்ச்சி யுடையாரோ காலத்தால் பிந்திய பாயிரத்திற் கூறப்படாத செய்தியைக் காலத்தால் முந்திய சித்தியாருள் எவ்வாறு கூறலாம் என்பது படச் சான்றேதுங் கண்டில மென்ருர்! எனவே காலத்தால் முற்பட்ட நூலுட் கூறப்பட்ட உண்மைகளைக் காலத்தால் பிற்பட்ட செய்யுளிற் கூறப் படாதது கொண்டு மறுத்தல் இவரையன்றி வேறு யாராலும் இயலாது!

சிவஞான போதப் பாயிரத்தில் நுவலப்படாத இறைவனையுஞ் சனற்குமாரரையும் யாங்ஙனம் அருணந்தியார் கண்டிருப்பார் என்பதைச் சூது வாது அறியாத கீழ்நிலை மாணவரை வினவியிருந்-தாலுங் கூட அறிவுறுத்தியிருப்பார். ஒரு மாணவனை அவனறிந்த பொருளை எவ்வாறு அறிந்தாய் என வினவில் தன் ஆசிரியர் மூலம் அறிந்ததாகப் பதிலுறுப்பதை இன்றுங் காணலாமே! அது கொண்டு ஆசிரியரின் ஒப்புதலோடு வெளிப்பட்ட சிவஞான சித்தியாரில் கூறப் பட்டன அவர் தம் ஆசிரியரிடமிருந்து பெறப்பட்டவைகளே என்று எளிதாக அனுமித்தறியலாமே! ஆயின் ஆராய்ச்சியுடையார்க்கோ காண்டல், கருதல், உரை முதலிய அளவைகள் உடன்பாடில்லை யாகலின் அவரால் உண்மைகளைக் கண்டு கொள்ள இயலவில்லை.

இஃதொருபுற மிருக்க; ''எந்தை சனற்குமரன்'' என்னும் நாந்தி வெண்பாவாலும் உணர்ந்து கொள்ளலாமே. ஆயின் அச்செய்யுளை ஆராய்ச்சியுடையார் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. அச் செய்யுளை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டால் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் இறைவனையுஞ் சனற்குமாரரையும் யாங்ஙனங் கண்டார் என்பதற்குச் சான்று கிடைத்து விடுமே! அதற்குப் பயந்து அச்செய்யுளைக் காணுதது போல் விட்டுவிட்டார்! இதனுல் ஆராய்ச்சி யுடையார் தாம் இட்டுக்கட்டிய கொள்கையை நிலைநிறுத்தும் பொருட்டு உண்மையை மறைத்தலை மேற்கொண்டார் என்பதே புலனுகும்.

(3) ''இன்னுஞ் சிவஞான சித்திப் பாயிரத்திற் காணப்படாத சத்திய ஞான தரிசனிகளையும் பரஞ்சோதி முனிவரையும் உமாபதி சிவனுர் யாங்ஙனங் கண்டனரோ அதற்குஞ் சான்றேதுங் காண்கிலம்'' என்ருர் ஆராய்ச்சியுடையார்.

மேலே காட்டிய முறையைக் கைக்கொண்டால் உமாபதி சிவாசாரிய சுவாமிகளுக்கு உணர்த்தியவர் அவரது ஆசிரியராகிய மறைஞானசம்பந்தர் என்பதும் மறைஞான சம்பந்தருக்கு உணர்த்தி-யவர் அவரது ஆசிரியராகிய அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் என்பதும்,

அருணந்தி சிவாசாரிய சுவாமிகட்கு உணர்த்தியவர் அவரது ஆசிரியராகிய மெய்கண்ட தேவநாயனர் என்பதும் வெள்ளிடை மலை போல் விளங்கி இருக்கும். இவ்வாறு வரலாற்றைத் தம் மாணுக் கர்க்குப் பாடஞ் சொல்லுங் காலத்தில் உணர்த்தவில்லை என்பதற்கு அகச்சான்று புறச்சான்றுகள் இல்லை. எனவே ஆராய்ச்சியுடையார் கூற்றுக்கள் பொய்யாய் முடிவதற்குத் தடை ஏதுமில்லை.

(4) ''மெய்கண்ட தேவர்க்கு அதனை அறிவுறுத்திப் போன முனிவர் பெயர் மெய்கண்ட தேவர்க்கே தெரியாமையாற் போலும் அவர் அதனைத் தமது நூலுள் யாண்டுங் குறிப்பிட்டிலர்'' என்ருர் ஆராய்ச்சி யுடையார்.

எனவே ஆராய்ச்சியுடையார், ''சொல்லாது விட்டால் தெரி யாமையே காரணம்'' என்பதை முடிந்த முடிபாகக் கொண்டுள்ளார் என்பது புலனுகும். நூலுள் யாண்டும் மெய்கண்ட தேவ நாயனர் தன்பெயரையே கூறவில்லை! நூலின் பெயரையுங் கூறவில்லை. தான் சிவஞான போதம் செய்ததாகவுங் கூறவில்லை. தமக்கு இந்நூல் கிடைத்த வரலாற்றையுங் கூறவில்லை. தம் தாயார் தந்தையார் பெயரையோ தம் வரலாற்றையோ கூறவில்லை. எனவே தம் பெயரைக் கூட அறியாதவர் என்ருே தாம் செய்த நூலின் பெயரைக் கூட அறியாதவர் என்ருே வெள்ளறிவுடையோருங்கூட ஆராய்ச்சியை மேற் கொள்ள மாட்டார்கள்.

அங்ஙனமன்று நூலுள் தம் வரலாறு கூறவேண்டிய அவசியம் இல்லை யாகலின் இவ்விவரங்களைக் கூருது விட்டார் என்று ஆராய்ச்சி யுடையாரின் கருத்துப் பரம்பரையினர் கூறலாம். அஃதே மெய் கண்ட தேவநாயனர் தம்மாசிரியரின் பெயரையுங் கூருது விட்ட தற்குக் காரணமாய் அமையுமாகலின் ''முனிவர் பெயர் மெய்கண்ட தேவர்க்கே தெரியாமையால்'' என்பது போலியுரையாய் முடிகின்றது. அன்றியும் மற்றச் செய்திகளை ஐதிகப் பிரமாணத்தால் உடன்பட்ட ஆராய்ச்சியுடையார்க்கு அவர்தம் ஆசிரியரின் பெயரையும் உடன் படுவதில் தடையென்னையோ?

(5) ''அருணந்தியாரோ வடமொழியாளர் மதத்தின் பாலராய் இறைவனே அதனை நந்தியெம்பெருமானுக்கு அருளிச் செய்தா ரென வொரு பொருந்தாவுரை புனைந்து விட்டார்'' என்ருர் ஆராய்ச்சி யுடையார்.

இதனுல் இறைவனே சிவஞான போதத்தை நந்தியெம் பெரு மானுக்கு அருளிச்செய்தார் என்பது வடமொழியாளரின் மதம் என்பது ஆராய்ச்சியாளரின் முடிவு என்பது பெறப்பட்டது. ஆயின், ''சிறப்புப் பாயிரங் கூறினரும்......... நந்திமுனி கணத்தளித்த உயர்சிவஞான

போத முரைத்தோன் என வாய்மையே கூறினர்'' (பக்.266) என்று உடன்பட்டார். அங்ஙனம் முனிகணத்துக்கு உரைத்தது நந்தியாயின் நந்திக்கு உரைத்தது யாவர் என்று சற்றுச் சிந்தித்திருந்தால் இறைவனே அருளிச் செய்தது என்ற விடை கிட்டியிருக்குமே! அதற்கு அவகாசம் இல்லைபோலும்!

மேலும் ஆராய்ச்சியுடையார், ''அவர்க்கு அறிவு தருதற்குக் கடவுளையன்றிப் பிறிதொரு பொருள் காணப்படாமையானும் அங்ஙனமவர்க்கு அறிவு தருதல் வல்லதான பரம்பொருள்'' (பக்.5)என்றார். எனவே ஆன்மாக்களுக்கு அறிவுதருதல் என்பது பரம்பொருளுக்கே உரிய தகுதியாகும் என்பது அவர் கருத்தாதல் பெறப்படும். அறிவு தருதல் என்பது நூல்வடிவாகவும் உபதேச, வடிவாகவுந்தானே நடைபெற இயலும். அன்றியும் ஆராய்ச்சியுடையாரும், ''அவ்வுயிர்களுள் உயிராய் மறைந்து நின்று அருள்புரிந்து வரும் முதல்வனே இரக்க மிகுதியாற் குருவடிவிற்போந்து'' (பக்.243) என்று மெய்கண்ட தேவர் கருத்தாகக் கூறினர். எனவே முதல்வனே குருவடிவில் வந்து போதித்தல் என்பது மெய்கண்ட தேவர்க்கு மட்டுமின்றி ஆராய்ச்சியுடையார்க்கும் உடன்பாடாதல் பெறப்பட்டது. அங்ஙனமாகவும் இறைவனே (குருவடிவாக) நந்தியெம் பெருமானுக்கு அருளிச்செய்தல் மட்டும் வடமொழியாளரின் மதமாய் முடிந்தது என ஆராய்ச்சியாளர் கூறுவது மொழியுணர்ச்சியைத் தூண்டும் பொருட்டு மேற்கொண்ட சூழ்ச்சிப்புனைவுரை என்பது தெளிவாகும்.

எனவே இறைவனே அதனை நந்தியெம்பெருமானுக்கு அருளிச் செய்தார் என்பது தமிழ்மொழியாளர் மதமாய் முடிவதும் நன்கு அறியப்படும். அது பற்றி ஆராய்ச்சியுடையார் கூற்றுப் பொய்யாய் முடிவதும் நன்கு அறியப்படும்.

(6) இன்னும் மெய்கண்ட தேவரோ தம்மாசிரியர் இன்னாரெனத்தாம் வகுத்த சிவஞான போதநூலுள் யாண்டும் எடுத்தோதாமையான் அந் நூலுக்குச் சிறப்புப் பாயிரங் கூறினரும் மெய்கண்ட தேவர்க்கதனை யுணர்த்தினர் இன்னாரெனக் கிளவாராய் வாளாநந்தி முனிகணத் தளித்த உயர்சிவஞான போத முரைத்தோன் என வாய்மையே கூறினர். படடாங்கு கிளந்த இம்மெய்யுரைக்கு மாறாக அருணந்தியார் சிவஞான போதப்பொருளை மெய்கண்ட தேவர்க்குணர்த்தினவர் சனற்குமாரர் எனக்கூறியது தமிழாசிரியராகிய மெய்கண்ட தேவர் கூர்ந்து கண்ட பொருளை வடமொழியாளர்க்கு உரிமையாக்குதற் பொருட்டுச்செய்த சூழ்ச்சிப் புனைவுரையேயாம். அதனல் அருணந்தியாருரை கொள்ளற் பாற்றன்றென விடுக்க'' என்றார் ஆராய்ச்சியுடையார்.

ஆராய்ச்சியுடையார் ''மெய்கண்ட தேவர் தம்மாசிரியர் இன்னு ரெனத் தாம் வகுத்த சிவஞான போத நூலுள் யாண்டும் எடுத் தோதாமையான்'' என்று கூறியது வெறும் சந்தர்ப்ப வாதமே என்பது மேலே காட்டப்பட்டது.

சிறப்புப் பாயிரத்துள் கூறப்பட வேண்டியவை நூற்பெயர் முதலிய எட்டுச் செய்திகளே. எனவே அவற்றிற்குப் புறம்பான நூலாசிரியர்க் குணர்த்திய ஆசிரியரின் பெயர் முதலியவற்றைக் கூறவேண்டிய அவசியம் இல்லை. எனவே பாயிரங் கூறினுர் ''மெய்கண்ட தேவர்க் குணர்த்தினுர்'' இன்னுரெனக்கூறவில்லை. அது பற்றி மெய்கண்ட தேவர் அறியார் என்பது அவரைச் சிவஞானி என்னுங்கூற்ருேடு முரணும். ஓரிடத்து ஒரு காலத்திலிருந்து மூவிடத்து முக்காலச் செய்தியையும் அறியவல்லவர்கள் சிவஞானிகள். அவ்வுண்மையறி யாது பலவாருகக் குழறினுர் ஆராய்ச்சியுடையார்.

ஆராய்ச்சியுடையார் ''நந்திமுனிகணத்தளித்த உயர்சிவஞான போத முரைத்தோன் என வாய்மையே கூறினுர்'' என்ருர். அத் தொடரால் இரு செய்திகள் பெறப்படுகின்றன. முதலாவதாக நந்தி யெம் பெருமான் சிவஞான போதத்தை முனிகணத்துக்கு அளித்தார் என்பது. இரண்டாவதாக அச்சிவஞான போதத்தை (மொழிபெயர்த்து) உரைத்தோன் மெய்கண்ட தேவன் என்பது. எனவே சிறப்புப்பாயிரங் கூறினுர் பட்டாங்கு கூறியபடி மெய்கண்ட தேவநாயனுர் மொழி பெயர்த்துச் செய்த செய்தியே வாய்மையாய் முடிகின்றது.

மேலும் ஆராய்ச்சியுடையார் ''அருணந்தியார் சிவஞான போதப் பொருளை மெய்கண்ட தேவர்க் குணர்த்தினவர் சனற்குமாரர் எனக் கூறியது'' என்ருர்.

இவ்விடத்து ஆராய்ச்சியுடையார் சிவஞான போதம் என்பதற்குச் சிவஞான போதப் பொருளை என்று பொருள் கொண்டார். அவ்வாறு கூறினல் மெய்கண்ட தேவர்க்கு உணர்த்தப்பட்டதும் சிவஞான போதப் பொருளே என்றும் மெய்கண்ட தேவர் செய்ததும் சிவஞான போதப் பொருளே என்றும் பொருள்பட்டுத் தமிழ்ச் சிவஞான போதம் சிவஞான போதப் பொருளைக் கூறிய வழிநூலே என்ருகும். அன்றியும் மெய்கண்ட தேவர்க் குணர்த்தினவர் சனற்குமாரர் என்று அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் கூறவுமில்லை. எனவே மெய்யுரை யாகிய பாயிரச் செய்யுளுள் கூறியபடி தமிழ்ச் சிவஞான போதம் மொழி பெயர்ப்பே என்று பெறப்படுகின்றது.

ஆராய்ச்சியுடையார், ''தமிழாசிரியராகிய மெய் கண்டார் கூர்ந்து கண்ட பொருளை'' என்ருர்.

ஆராய்ச்சியுடையார், ''அது கண்ட முனிவர் பிரானுர்தாம் தம் ஆசிரியன்பாற் பெற்ற மெய்ப் பொருளியல்புகளையும் உயிர் மாசு தீர்ந்து சிவத்தின் அருளிற் படிந்து சிவமாயிருக்கும் நிலைகளையும் அவற்றை எய்துதற்கான முடிந்த முறைகளையும் அப்பிள்ளையார்க்கு இனிதறிவுறுத்தி இவ்வுண்மைகளை எங்கும் பரவச் செய்து எல்லோரையும் சிவநெறிக்கட் செலுத்திடுக எனக் கட்டளை தந்து போயினரென்பது'' (பக்-261) என்றார். அவரே பின்னர், 'மெய்கண்ட தேவர் தமது சிவஞான போத நூலுட் பலவாற்றானும் ஆராய்ந்து முடித்த முடிவுகள் தமக்கு முன் இமயம் முதற் பொதியம் ஈருக விரிந்த தமிழ் நாட்டிலிருந்த சான்றோர்கள் ஆராய்ந்து கண்ட முடிவுகளே யாதலை விளங்கத் தெரித்தாராயினர்'' (பக்-269) என்றார். மெய் கண்டார் கூர்ந்து கண்ட பொருள் பக்-261ல் குறிப்பிடப்பட்டவை களா அல்லது பக்.269ல் குறிப்பிடப்பட்டவைகளோ என்பதை ஆராய்ச்சியுடையார் ஆராய மறந்து விட்டார்! இரண்டு செய்தி களையுங் கூர்ந்து கண்டவர் மெய் கண்ட தேவர் எனக் கூறினல் மெய்கண்டார் கூற்றெல்லாம் தமிழ் நாட்டிலிருந்த சான்றோர்கள் ஆராய்ந்து கண்ட முடிவுகளே யாகி வழிநூலாய் முடியும். அன்றியும் ஆராய்ச்சியுடையார், ''அந்நூல் மெய்கண்ட தேவராலேயே முதன் முதல் தமிழில் இயற்றப்பட்ட ''(பக்-279) தென்பது பொய்யாய் முடியும்.

அன்றியும் ''வடவேங்கடந் தென்குமாரி'' எனத் தொல் காப்பியரால் எல்லை கூறப்பட்டிருக்கவும் ஆராய்ச்சியுடையார் ''இமய முதற் பொதியம் ஈருக விரிந்த தமிழ் நாட்டகத்திருந்த.'' (பக்-268) என்று கூறித் தொல்காப்பியரையும் மறுத்தார். இவ்வாறு மரபிகந்து தமக்கு தோன்றியதையெல்லாம் எழுதி வைப்பது ஆராய்ச்சி என்பது அவரது அடிப்படைக் கொள்கை போலும்!

''சிவஞான போதப்பொருளை . . . வடமொழியாளர்க்கு உரிமை யாக்குதற் பொருட்டுச் செய்த சூழ்ச்சிப் புனைவுரையேயாம்'' என்றார் ஆராய்ச்சியுடையார்.

எனவே அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் தமிழ்ச் சிவஞான போத நூலை மொழிபெயர்ப்பெனவே கொண்டவர் என்பது ஆராய்ச்சி யுடையார் கண்ட செய்தி என்பது புலப்படும். அருணந்திசிவாசாரிய சுவாமிகளோ மெய்கண்ட தேவ நாயனரின் மாணவர். ஆராய்ச்சி யுடையாரோ ஏழு நூற்ருண்டுகட்குப் பிற்பட்டவர். எது உண்மை யாக முடியும். சமகாலத்தவரான மாணவரின் கூற்றுத்தானே உண்மையாகும்.

அன்றியும் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் இறையருள் பெற்றவர். சீவன் முத்தராய்த் திகழ்ந்தவர். எல்லாவற்றையும்

துறந்த சிவஞானி. வேண்டுதல் வேண்டாமை இல்லாதவர். அவர் சூழ்ச்சி செய்தற்கு யாதொரு காரணமுமில்லை. அவசியமும் இல்லை. வடமொழியாளர்க்கு உரிமையாக்கிப் புகழும் பொருளும் தேடவேண்டிய நிலை இல்லை. ஆராய்ச்சியுடையாரோ அத்தன்மைகள் இல்லாதவர். எனவே மொழியுணர்வு இனவுணர்வு முதலியவைகளைத் தூண்டிப் புகழும் பொருளும் வேண்டினர். அதுபற்றி ஆராய்ச்சியுடையாரின் கூற்றுக்களே சூழ்ச்சிப் புனைவுரைகளாகும்.

மேலும் ஆராய்ச்சியுடையாரின் கூற்றுக்களில் காணப்படும் குற்றங்களை ஆராய முற்பட்டால் ''மணற்சோற்றில் கல்லாய்தலாய்'' முடியும். ஆயினும் ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்ற நியாயப்படி ஒன்றை மட்டும் இவ்விடத்துக் காணலாம்.

ஆராய்ச்சியுடையார், ''இவர்தம் முதன் மாணவரான அருணந்தி தேவர் . . . சிவஞான போதச் சிறப்புப் பாயிரத்தின்கட் குறித்தவாற் றுனும்'' (பக்-249) என்று சிவஞானபோதச் சிறப்புப் பாயிரஞ் செய்தவர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளே என்று முடிவு கட்டினர். பின்னர் அதனை மறந்து, ''சிவஞான போதத்திற்குப் பாயிரம் உரைத்தார் அருணந்தியாராதல் கூடாது'' (பக்-263) என்று தன் கூற்றையே மறுத்தார்!

இவ்வாறு முன்பின் பாராது முரணிக் கூறுதலும் அதுபற்றித் தன்னையே தான் மறுத்தலும் இவரது ஆராய்ச்சியின் தனிச்சிறப்பு. எனவே இதுகாறுங் காட்டப்பட்டவைகளால் சிவஞானபோத ஆராய்ச்சி யுடையாரின் கூற்றுக்கள் தள்ளத் தக்கனவே என்பது பெறப்படும்.

ஆயினும் மெய்கண்ட தேவநாயனர் தமதுநூலை வழிநூலாகக் காட்டியுள்ளாரோ என்னும் ஐயம் எழும். ''மலர்தலையுலகின்'' என்னுஞ் சிறப்புப் பாயிரத்துள் ''நந்திமுனி கணத்தளித்த உயர் சிவ ஞான போத முரைத்தோன் ..... மெய்கண்ட தேவன்'' என்று கூறப் பட்டுள்ளது. அத்தொடர் ''நந்தியெம் பெருமான் முனிகணத்திற்குக் கொடுத்த உயர் சிவஞான போதத்தினை உரைத்தோன் மெய்கண்ட தேவன்'' என்று பொருள்படும். அதனுள் அளித்தல் என்னுந் தொழிலுக்கு வினைமுதல் (கருத்தா) நந்தியெம் பெருமானும் செயப் படு பொருள் சிவஞான போதமுமாய் அமைகின்றன. எனவே சிவ ஞான போதம் என்னும் நூல் நந்தியெம் பெருமானல் முனிகணத் திற்குக் கொடுக்கப்பட்டது என்பது பெறப்படும். எனவே அத்தொட ரால் நூலின் பெயர் ''சிவஞான போதம்'' என்பதும் நூலைக் கொடுத்தவர் ''நந்தி'' என்பதும் நூலைப்பெற்றவர் ''முனிகணம்'' என்பதும் அச்சிவஞான போதத்தைத் தமிழில் உரைத்தவர் ''மெய் கண்ட தேவர்'' என்பதும் பெறப்படும். நந்தியெம்பெருமானல்

கொடுக்கப்பட்டது ஒருசிவஞான போதம். மெய்கண்ட தேவநாயனு ரால் தமிழில் உரைக்கப்பட்டது ஒரு சிவஞான போதம். ஆக இரு சிவஞான போதம் ஆண்டுக் கூறப்பட்டுள்ளமை தெற்றென விளங்கும். நந்தியெம் பெருமான் தந்த சிவஞான போதத்தை உரைத்தோன் என்றமையான் நந்தியெம்பெருமான் தந்தது முதனூல் என்பதும் மெய்கண்ட தேவ நாயனுரால் செய்யப்பட்டது வழிநூல் என்பதும் பெறப்படும்.

மேலும் நந்தியெம் பெருமானுல் கொடுக்கப்பட்டது உபதேசமே யன்றி நூலன்று என்னுந் தடையை நீக்கும் பொருட்டு ஆசிரியர் இறுதிக் கண்ணுள்ள நாந்தி வெண்பாவில் ''நந்தி உரைத்தருளு ஞான நூல்'' என்ருர். எனவே அவ்வெண்பாவால் நந்தியெம் பெரு மான் கொடுத்தது சிவஞான போதம் என்னும் ஞானநூல் என்பதும் அதனைப்பெற்றவர் சனற்குமாரர் என்பதும் பெறப்படும். இன்னும் மெய்கண்ட தேவ நாயனுர் இறுதிச் சூத்திர இறுதி வெண்பாவில் ''ஒண் குருவாலின்றிந் நூன் மும்மை மலர்க்கு'' என்று உபதேசிக்கப் படுவது நூலே என விதித்தார். எனவே அதுபற்றி நந்தியெம்பெரு மான் உபதேசித்தது சிவஞான போதம் என்னும் நூலே என்பது தெளிவாகும். அதனைத் தமிழில் உரைத்தவர் மெய்கண்ட தேவ நாயனுர் என்றதனுல் நந்தியெம் பெருமானுல் கொடுக்கப்பட்டது வட மொழிச் சிவஞான போதம் என்பதும் மெய்கண்ட தேவ நாயனுரால் இயற்றப்பட்டது மொழிபெயர்ப்பாகிய சிவஞான போதம் என்பதும் தானே போதரும்.

மேலும் சிறப்புப் பாயிரம் பெற்றமையாலே அந்நூல் வழிநூல் என்பதைப் புலப்படுத்தும். சிறப்புப் பாயிரத்துள் ஆக்கியோன் பெயர், வழி, எல்லை, நூற்பெயர், யாப்பு நுதலிய பொருள், கேட்போர், பயன் என்னும் எட்டும் கூறப்படும் என்பது எல்லோருக்கும் உடன் பாடே. அவற்றுள் ''வழி'' என்பது ''எந்நூலின் வழி'' என்பதைக் குறிக்குமகாலின், சிறப்புப் பாயிரம் பெறுதல் வழிநூலுக்குரிய மர பாகும் என்பது பெறப்படும். எனவே அது கொண்டும் மொழி பெயர்ப் பாகிய வழிநூல் என்பது தானே போதரும்.

அங்ஙனமன்று அச்சிறப்புப் பாயிரம் பிற்காலத் தோரால் செய்யப் பட்ட தாகலின் பிரமாணமாகுமோ எனின் அவ்வாறு கூறுதல் அறியாக் கூற்ருகும். யாங்ஙனமெனிற் கூறுதும்.

மெய்கண்ட தேவ நாயனுர் இறுதிச்சூத்திர இறுதி வெண்பாவில், ''ஒண்குருவா-லின்றிந்-நூன் மும்மை மலர்க்கு'' என்ருர். ஆயின் நூலில் பெயரை யாண்டுங் கூறவில்லை. எனவே பெயரில்லாத ஒரு நூலைச் செய்தார் என்பதோ நூற் பெயரைக் கூற மறந்து விட்டார் என்பதோ அறிவுடைமையாகாது. (காரணமுடையார் கூட்டத்தார்

மெய் கண்டார் தூங்கி விட்டார் என்று கூறி மகிழ்ந்து கொள்ள லாம்.) அன்றியும் பாயிரம் பிற்காலத்துச் செய்யப்பட்டது என்ருல் இடைக் காலத்தில் நூல் பெயரின்றி வழங்கியது என்பதோ பெயரில் லாத நூலே மாணவர் கேட்டார் என்பதோ பொருந்தாது. அன்றியும் சகலாகம பண்டிதர் மெய்கண்ட தேவரைச் சந்தித்த காலத்து மெய் கண்ட தேவ நாயஞர் தம் மாணக்கர்க்கு சிவஞான போதத்தை உபதேசம் செய்து கொண்டிருந்தார் என்பது மரபு. எனவே பாயிரம் நூல் செய்த காலத்தே செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

அங்ஙனமன்று, இடைக்காலத்தில் நூற்பெயர் வழக்கத்திலிருந்து பின்னர்ச் சிறப்புப் பாயிரஞ்செய்த காலத்தில் எழுத்து வடிவத்திற்கு வந்ததாகக் கொள்வதால் வரும் இழுக்கென்னையோ வெனின், அங்ஙனங்கூறுவது கூறுவாரது ஊகமேயன்றி வேறு பிரமாணமின்மை யின் உண்மையாகாது பொய்யாய் முடியும். மேலும் இறுதிச் சூத்திர இறுதி வெண்பாவிற் கூறப்பட்ட ''இந்நூல்'' என்னுமிடத்தில் சுட்டு யாதானுமொன்றைச் சுட்ட வேண்டுமாகலின் அவ்வாறு சுட்டுதற்கு நூலுள் நூற்பெயர் கூறப்படாமையின் வெற்றெனத் தொடுத்தலாய் முடியும். அன்றியும் நின்று பயனின்மையாய் முடியும். பெயரைக் கூற மறந்தார் என்பது ஆசிரியருக்கு இழுக்குத் தேடுவதாய் முடியும். ஆயின் இந்நூல் என்பது இந்த நூலேயே சுட்டியது என்ருல் விதண்டையாய் முடியும். ஏனெனில் நூலினுள் ஒரு சிறு கூருகிய வெண்பாவிற் கூறப்பட்ட சுட்டு நூல் முழுவதையும் சுட்டியது என்பது பொருந்தாது. அது தன்னேயே சுட்டியதாகக் குற்றப்படும். இந்நூல் என்புழி அண்மைச் சுட்டாகலின் அருகிலுள்ள ஒன்றனேயே சுட்ட இயலும். இதனே இவ்வீடு அவ்வீடு என்னும் உதாரணங்களில் வைத்துக் காணலாம். எனவே அதனுனும் தன்னேச்சுட்டுதல் இயலாது என்பது பெறப்படும். இதுகாறுங் கூறியவாற்ருல் சுட்டு நூலும் கூறப்பட்டதொன்றையே சுட்ட இயலும் என்பது பெறப்பட்டது. எனவே நூல் செய்த காலத்து நூற்பெயர் வழக்கிலிருந்தது பின்னர் எழுத்து வடிவாகியது என்பது பொய்யாய் முடியும். பாயிரத்துட் கூறப்பட்ட நூற்பெயரை ''இந்நூல்'' என்பதன்கண்ணுள்ள சுட்டு சுட்டியதாகக் கொள்வதே பொருந்தும். அதனுனும் நூல் செய்யப் பட்ட காலத்துப் பாயிரமும் செய்யப்பட்டது புலனுகும். அன்றியும் இந்நூல் என்பது சிவஞான போதம் என்ற பொருளேத் தர இயலாது.

ஆயின் பாயிரஞ் செய்தற்கு உரியோர் ஆசிரியர் உடன்பயின்ற மாணவர் தம் மாணவர் என்ற மூவருள் ஒருவராக வேண்டுமே! மெய்கண்ட தேவ நாயனுருக்கு உபதேசித்த ஆசிரியர் நூல் செய்த காலத்து உடனில்லாமையான் அவர்தம் ஆசிரியரால் பாயிரஞ் செய்யப்பட்டிருக்க' இயலாது. மெய்கண்ட தேவ நாயனுருக்கு உடன்

மாணவரென ஒருவர் இன்மையான் உடன் மாணவராலும் செய்யப் பட்டிருக்க இயலாது. நூல் செய்த காலத்து அவருக்கு மாணவ ரின்மையான் அவரது மாணவரானும் செய்யப்பட்டிருக்க இயலாது. ஆகலின் ''ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்—பாயிர மில்லது பனுவலன்றே'' என்னும் ஆன்ஞோராசாரம் பாதுகாத்தற் பொருட்டும், மாணுக்கர்க்குப் பலவகையானும் எழும் ஆசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற் பொருட்டும் ஆசிரியரே பாயிரஞ் செய்தல் இன்றியமையாததாயிற்று. மாணுக்கர் பொருட்டே இந்நூல் செய்யப் பட்டதென்பது ''இதன் பொழிப்புரைத்துக் கொள்க'' என ஆசிரியர் முதற்சூத்திரத்தில் ஆணை தந்தமையானும் ''சிவமெனும் அந்ததர'' என மாணவனை விளித்தலினுனும் பெறப்படும்.

ஆயின் ''தான்தற் புகழ்தல் தகுதியன்றே'' என்ற முறைப்படி ஆசிரியரே பாயிரஞ் செய்தல் ஒவ்வாது எனக் கூறலாம். மெய்கண்ட தேவநாயனுர் சிவஞான போதத்திற்குச் சித்தாந்த மரபை பின்பற்றித் 'தர்க்கமொடு உத்திரங்களினுற் சமயஞ் சாதித்து'' நிறுத்த வேண்டி மேற்கோள் ஏது உதாரணம் இவற்றைத் தமிழ்நாடுய்யத் தமிழிலேயே செய்ய விரும்பினுர். ஆயின் சூத்திரங்கள் வடமொழியிலும் மேற் கோள் முதலியவை தமிழிலும் இருத்தல் பொருந்தாதாகலின் மூல நூலையும் மொழி பெயர்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. எனவே உரையாசிரியரே உரைப்பாயிரஞ் செய்யலாம் என்னும் மரபு பற்றிப் பாயிரஞ் செய்தார்.

மேலும் இந்நூல் அரங்கேற்றப்படாதது. எனவே அவைக் களத்துக் கேட்டாரிலர். அன்றியும் பாயிரம் பெறுதல் வழிநூல் மர பாகலின் தம்நூல் வழிநூல் எனக் காட்டவும் பாயிரஞ் செய்ய வேண்டிய அவசியம் மெய்கண்ட தேவ நாயனுருக்கு ஏற்பட்டது.

இன்னும் சிவஞான போதம் என்பதன் பொருளுரைக்கு மிடத்துப் பாடியகாரர் ''சைவாகமங்களின் பொருளுணர்த்துவது சிவஞான போத மெனக் காரணக்குறியாயிற்றென்றுணர்க'' என்றும் ''இப் பொருள் வடமொழிச் சிவஞான போதத்துப் பன்னிரண்டாஞ் சூத்தி ரத்துப் பிற்பாதியிற் கூறியது பற்றியுரைக்கப்பட்டது'' என்றும் கூறினுர்.

அங்ஙனமாயினும் நூன்முகத்தும் இறுதியினும் கூறுதல் ''கூறியது கூறல்'' ஆகாதோ என்னும் ஐயம் எழலாம். இவ்வாறு ஐயுறுவார் மயக்க மறுக்கவும் சித்தாந்த மரபிது எனக் காட்டவும் பாடிய காரர்

சிறப்புப் பாயிரப் பகுதியுள், ''எந்தை சனற்குமர னென்பதனுற் பெறப்பட்டதனேயே மாணுக்கர்க்கு நூன்முகத்து உணர்த்துற் பொருட்டு ஈண்டுத் தந்துரைத்தா ராகலான்'' என்றும் சித்தாந்த மரபும் அதுவே எனக் காட்டுவார், ''மிருகேந்திரத் திறுதீயிற் கூறும் வரலாற்றினே நாராயண கண்டவாசிரியர் நூன்முகத்துத் தந்துரைத்தது மிக் கருத்தே பற்றி யென்க'' என்று கூறினர்.

''மாணுக்கர்க்கு நூன்முகத்து உணர்த்துதற்பொருட்டு'' என்னும் பயன் நோக்கி ''மலர்தலே உலகின்'' என்னும் சிறப்புப் பாயிரம் நூன்முகத்துச் செய்யப்பட்டமையின் ''கூறியது கூறல்'' என்னுங் குற்றமின்ருயிற்று.

மிருகேந்திரம் இறைவனுற் செய்யப்பட்டது. அதுபோல வட மொழிச் சிவஞான போதம் இறைவனுற் செய்யப்பட்டது. மிருகேந்திர உரையாசிரியர் நாராயண கண்ட ஆசிரியர். சிவஞான போதத் தமிழுரையாசிரியர் மெய்கண்ட தேவ நாயனுர். நாராயண கண்ட வாசிரியர் ஈரிடத்தும் உரைத்தது போன்று மெய்கண்ட தேவநாயனுர் முன்னும் பின்னுமாகிய ஈரிடத்தும் பாயிரமும் நாந்தி வெண்பாவும் யாத்தருளினர். இவ்வாறு சிந்தாத்த மரபும் காட்டப்பட்டது. எனவே ஆசிரியரே பாயிரஞ் செய்தமை இனிது விளக்கப்பட்டது.

மேலும் பாடியகாரர், 'அல்லதூஉம் பொதுவியல்பு சிறப்பியல்பு என இருதிறப்படுத்துணர்த்தியது இந்நூல் என்னும் பாகுபாடு ஆண்டுப் பெறப்படாமையின் அது கூறப்புகுந்தார் ஏனேயவும் உடன் கூறினர் எனக்கூறலும் ஒன்று;' எனக்கூறு மாற்ருன் நூலாசிரியரே பாயிர ஆசிரியர் என்பது நன்கு விளங்கும். என்னெனிற் கூறுதும்.

பொதுவியல்பு சிறப்பியல்பு என்னும் பாகுபாடு ஆசிரியரே உப தேச முகத்தான் அறிந்தவராகலான் அதனே மாணுக்கர்க்கு உணர்த்தும் பொருட்டுக் கூறவேண்டிய கடப்பாடுடையவர். அன்றியும் பின்னெரு வர் கண்டு கூறினர் என்ருல் ஆசிரியர்க்குக் கூருது விட்ட குற்றந் தங்கும். எனவே மாணுக்கர்க்கு உணர்த்தும் பொருட்டு அப்பாகுபாடு களே நன்குணர்ந்த ஆசிரியரே செய்தார் என்பது பெறப்படும்.

அன்றியும் பன்னிரண்டாஞ் சூத்திர இறுதி வெண்பாவில் பாடிய காரர், ''இன்றிந்நூலென்பது இந்நூலென்னும் பொருட்டு'' என்றும், ''அது தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியேரர் தாமுணர ஏது திருட்டாந்தத்தாலின்று'' என வருகிற வெண்பாவிற் கூறியவாற்ருனும் அறிக'' எனக்கூறுமாற்ருன் நாந்தி வெண்பாவை இயற்றியவரும் ஆசிரியரே என்பது பெறப்படும். (நாந்தி என்பது தன்னேப்பிறன் போற் படர்க்கையில் வைத்துக் கூறுவது)

மேலும் சிறப்புப் பாயிரப் பகுதியுள் பாடிய காரர், இவ்வாறன்றி ஞாயிற்றைக் கடவுட்குவமையாக்குவாருமுளர். நூலுட் கூறியவதனைப் பாயிரத்துட் கூறவேண்டாமை யானும் ஈண்டைக் காவதோர் பயன் ருராமையானும் ''அஃதுரையன்மை யறிக'' என்றும், இரண்டாஞ் சூத்திர இரண்டாம் அதிகரணத்துள், ''பெத்தத்தினின்ற நிலேயே பொதுவியல்பெனவும் முத்தியினின்ற நிலே தன்னியல்பெனவும் மேற் பாயிரத்திற் காட்டுதலின் இவை அங்ஙனம் நிற்றல் முறையே பொதுவியல்புந் தன்னியல்பு மாகலான் அநேகாந்த வாத மென்னும் குற்றமின்மை யுணர்க'' என்றுங் கூறினர். தமிழ்ச் சிவஞான போதமும் பாயிரமும் ஒரே ஆசிரியராற் செய்யப்பட்ட காரணத்தாலே பாயிரத்துட் கூறப்பெற்றது மறுத்தற்கேது வாயிற்று. அல்லாக்கால் நூலுட் கூருமை குன்றக் கூறலாய் முடியும். என்வே நூலாசிரியரும் பாயிரவாசிரியரும் ஒருவரே என்பது பெறப்படும். அதுபற்றியே சிறப்புப் பாயிரப் பகுதியுள், ''நூலுட் கூறியவதனைப் பாயிரத்துட் கூறவேண்டாமை யானும்'' என்று கூறினர். இம்மரபு பற்றியே சுவாமிநாத பண்டிதர் பதிப்பித்த சிவஞான போதத்துள் பாயிரத்தையும் நாந்தியையும் மெய்கண்ட தேவநாயனர் திருவாக்குகளாகக் காட்டியுள்ளார்.

மேலே கூறிய வாற்ருற் பாயிரமும் ஆசிரியர் மெய்கண்ட தேவ நாயனுராலேயே செய்யபட்டதென்பது நன்குணரப்படும். எனவே பாயிரம் பெற்றமையானும் இருவேறு சிவஞான போதம் குறிக்கப் படுதலினுலும் தமிழ்ச் சிவஞான போதம் வழிநூலாகிய மொழி பெயர்ப்பே என்பது துணியப்படும்.

காசிவாசி செந்திநாதையரவர்கள் வெளிப்படுத்தியது ''சிவஞான போத வசனலங்கார தீபம்'' என்னும் நூல். அதனுள் வசனலங்கார தீப பூமிகை என்னும் பகுதியுள், ''சீடனுக்குப் பாவனு தீக்கை செய்து சிவஞான போதத்தைக் கொடுக்க'' என்று பொருள்படும் இரௌரவாகமத்துத் தீக்கை விதிப் பிரகரணச் சூத்திரத்தை மேற் கோளாகக் காட்டியுள்ளார்கள். அது வருமாறு, ''பாவனுதீக்ஷயாசை நம் சுத்தம் க்ருத்வாயதா விதி । சிவஞானபோத சாஸ்த்ரம் தத்யாத் பத்யாதி சிந்தனம் ॥'' என்பதாம். எனவே வடமொழிச் சிவஞான போதம் உண்டென்பதும் அது இரௌரவப் பகுதி என்பதும் உணரப் படும்.

இன்னும் தமிழ்ச்சிவஞான போதத்து முதற்சூத்திரத்து, ஆசிரியர் ''என்மனர் புலவர்'' என்றமையானும் வழிநூலென்பது துணியப்படும். ஆண்டுப்புலவர் என்றது அளவையினியல் புணர்ந் தோரைக் குறிக்கும் எனப் பாடியகாரர் கூறியுள்ளார். ஆசிரியரே நாந்திவெண்பாவில் ''ஏது திருட்டாந்தத்தால்'' என்று கூறினமை

யின் புலவர் என்றது ஏற்புழிக் கோடல் பற்றி அளவையிலக்கணம் உணர்ந்தோரைக் குறித்தலே இயல்பு என்று ஒரு சாரர் கூறலாம்.

ஆயின் வெவ்வேறு சமயத்தார் தத்தமக் கேற்றவாறு வெவ்வேறு பிரமாணங்களைக் கொள்ளுகின்றனர். எனவே எல்லாச் சமயப்பிர மாணங்களையும் அறிந்து மேலான பிரமாணத்தை நிச்சயித்தாலன்றிச் சிவஞான போதப் பொருளை ஐயந்திரிபற உரை இயலாதாகலின் அளவையின் இயல்பு உணர்தல் முன்னர் வேண்டப்படும். எனவே பாடியகாரர் ''அளவையின் இயல்பு உணர்ந்தோர்'' எனப்பொருள் கூறினர்.

அன்றியும் ''என்மனர்'' என்பது எதிர்கால முற்றுச்சொல். எனவே எதிர்காலத்தும் ''அளவையினியல் புணர்ந்தோர்'' சூத்திரத் திற்கு ஆசிரியர் கொண்ட பொருளையே உடன்படுவர் என்பது கருத்து. பரஞ்சோதி முனிவரின் உபதேசப்படியே மொழிபெயர்த் தாராகலின் இறப்பு நிகழ்வு என்னும் இருகாலத்தும் பொருள் நிச்சயம் தெற்றென அறியப்படும். எனவே வருங்காலத்தும் உடன்படுதலே வேண்டப்படும். இக்கருத்துப்பற்றியே ஆசிரியர் ''என்மனர்'' என்னும் எதிர்காலச் சொல்லால் கூறினர். எனவே ''முக்காலத்தும் முதனூல் சூத்திரப் பொருள் இதுவே'' என்பது ஆசிரியர் கருத்தாதல் வெளிப்படை.

இவ்வாறு முக்காலத்தும் நின்று நிலவும் உண்மைகளை எதிர் காலத்தாற் கூறலே தமிழ்மரபு. ஆசிரியர் தொல்காப்பியர் ''எழுத் தெனப்படுப'' என்று எதிர்காலச் சொல்லால் நிறுவினமையானும் மரபு அறியப்படும்.

எனவே என்மனர் புலவர் என்பது வருங் காலத்தும் அளவை யினியல் புணர்ந்தோர் முதனூல் சூத்திரப் பொருளை இவ்வாறே கொள்வர் என்பது கருத்தாகலின் மொழி பெயர்ப்பாகிய வழிநூலென்று ஆசிரியர் உடன்பட்டது உணரப்படும்.

இன்னும் ஆசிரியர் ஒவ்வொரு சூத்திரத்தும் ''என்பது சூத்திரம் என்னுதலிற்றோ வெனின்'' என்றெடுத்துச் சூத்திரக் கருத்தை காட்டிப் பின்னர் வார்த்திகமும் உதாரண வெண்பாவுங் காட்டிக் கருத்தை விளக்கிச் செல்கின்றார். முதல் நூல் செய்வது கருத்தாயின் ''என்பது சூத்திரம்'' என்பது வேண்டாவழிக் கூற்றாய் முடியும். அன்றியும் உரையாசிரியர்களே ''என்பது சூத்திரம்'' எனக் காட்டிப் பின் உரை செய்வதே மரபாகலின் அது கொண்டும் மெய்கண்ட தேவ நாயனர் செய்தருளியது வழிநூலே என்பது பெறப்படும். அது பற்றியே பாடியகாரரும், ''இங்ஙனம் பாடத்தை மொழி பெயர்த்துக் கொண்டு என்பது சூத்திரமெனக் காட்டி இனி அதன் கருத்துரைக் கின்றார்'' என்று கூறினர்கள்,

எனவே ''என்பது சூத்திரம்'' என்பதை ''மேலே கூறியது முதனூற் சூத்திரத்தின் மொழிபெயர்ப்பாகிய சூத்திரம்'' என்று பொருள்கோடலே ஆசிரியர் கருத்தாதல் இனிது விளங்கும். அன்றியும் சூத்திரக் கருத்துணர்த்துதலும் முதனூற் சூத்திரத்தின் கருத்துவகை பற்றியே மொழிபெயர்க்கப்பட்டது என்பதை அறிவித்து நிற்கும். அற்றாகலினன்றே ஆசிரியர் ''நுதலிற்று'' என வாளா கூறாது ''உணர்த்துதல் நுதலிற்று'' என விதந்தோதினர். அப்பன்னிரு சூத்திரங்கட்கும் அவரே ஆசிரியராயின் ''என்பது நுதலிற்று'' என்ப தன்றோ அமைவுடைத்து.

முதனூற் சூத்திரத்தாற் பெறப்படுங் கருத்தை ''உணர்த்துதல்'' என்பதனானும், முதனூற் சூத்திரத்தின் கருத்துவகை பற்றியே மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டது என்பதை ''நுதலிற்று'' என்பதனானும் உணர்த்தினர். எனவே அத்தொடருக்கு, ''முதனூற் சூத்திரமுணர்த்து தலை மொழி பெயர்த்து நுதலிற்று'' என்று கூறுவதன்றோ ஆசிரியர் கருத்தொடு பட்டதாகும். ஆசிரியர் அவ்விடத்து (1) மொழி பெயர்ப்பு என்பதையும் (2) அம்மொழி பெயர்ப்புங் கருத்து வகையானென்ப தையும் உடன்பட்டார் என்பதே சாலும். எனவே முதனூல் எனச் சாதிப்பார் கூற்றெல்லாம் மெய்கண்ட தேவ நாயனார் கொள்கைக்குப் புறம்பாகும்.

ஆயின் ''நுதலிற்று'' எனக்கூறவந்த ஆசிரியர், ''உணர்த்துத னுதலிற்று'' எனக் கட்டுரைச் சுவைபடக் கூறினர் என்றால் என்னை இவ்வாறு கூறின். தான் தாம் என்பன போன்று ''உணர்த்துதல்'' என்பது கட்டுரைச் சுவைபட நிற்றல் இன்மையான் அது பொருந் தாது. அன்றியும் வேண்டப்படாத சொற்களைப் பெய்துரைத்தல் மயக்கத்திற்கு ஏதுவாகும். எனவே சாத்திரத்துள் இவ்வாறான மயக் கத்திற்கு ஏதுவாகுஞ் சொற்களை ஆளுவதில்லை. எனவே சாத்திரங் கூறவந்த ஆசிரியர் மயக்கத்திற்கு ஏதுவாகுஞ் சொற்களைப் பிரயோகிக்க மாட்டாராகலின் ''கட்டுரைச் சுவைபட நிற்றல்'' என்பது சற்றும் பொருந்தாது.

ஆயின் ''உணர்த்துதனுதலிற்று'' என்பது ''உணர்த்திற்று'' என்னும் பொருள்பட நின்றதெனக் கொண்டால் என்னையெனின், அதுவும் பொருந்தாது. என்னுதலிற்றோ என எடுத்துக் கொண்டதற் கேற்ப நுதலிற்று எனமுடிதலே இயைபுடைத்து. என்னுதலிற்றோ என்பது நுதலிற்று என்பதனோடு முடிதலின் உணர்த்துதல் என்னுந் தொழிற்பெயர் காரகப்படுதல் பெறப்படும். எனவே அத்தொடர் ''உணர்த்துதலை நுதலிற்று'' எனப் பொருள்படும். எனவே ''உணர்த்துதலை'' என்பதை ''முதனூற் சூத்திரம் உணர்த்துதலை'' என்றே கொள்ளவேண்டும்.

மேலும் நுதல் என்னும் பகுதி உரைத்துக்கொள்க என்புழிப் போல நிற்றல் இயலாது. உரைத்துக்கொள்க என்புழி கொள் என்பது தற்பொருட்டாய் நின்றது, ஆயின் நுதல் என்பது தற்பொருட்டுப் பொருளில் வர இயலாது. அன்றியும் ''கொடுத்திடு'' என்புழிப்போல பகுதிப்பொருள் விகுதியாய் நிற்றற்கும் இயலாது. அன்றியும் ''உரைத்துக்கொள்க'', ''கொடுத்திடு'' என்பன போல ''உணர்த்து தல் நுதலிற்று'' என்பது ஒரு சொற்றன்மை எய்த இயலாமையின் அவ்வாறு நிற்றல் இயலாமை வலியுறுத்தப்படும்.

ஆயின் புகலலுற்றும், தெரிக்கலுற்றும் என்பன போன்று உணர்த்து தனுதலிற்று என்பது தொழிற்பெயரும் முற்றும் சேர்ந்து ஒரு பொருள் குறித்து நின்றது என்றால் என்னையெனின் அதுவும் பொருந்தாது. புகலலுற்றும், தெரிக்கலுற்றும் என்புழி உறு என்பது கூடுதல் என்னும் பொருட்டாகலின் புகலல், தெரிக்கல் என்னும் பொருள் பற்றியே நிற்றற்கு இயைபுடையதாகிப் புகலுவாம் விளக்குவாம் என்று பொருள் பட்டு நின்றன.

ஆயின் ''உணர்த்துதல் நுதலிற்று'' என்புழி நுதல் என்பது கூடுதல் முதலிய துணைவினைப் பொருளில் வாராமையின் உணர்த் திற்று எனப் பொருள்பட நிற்றல் இயலாது. உணர்த்திற்று எனக் கொண்டால் என்னுதலிற்றோ என்று எடுத்துக் கொண்டதற்கு ஏற்ப உணர்த்திற்று என்பது முடிவாகாது. எனவே அண்மை தகுதி அவாய் நிலை முதலியவற்றுள் தகுதியின்றாகின்றது. ஆகலின் வாக்கியக் குற்றமாய் முடியும். அன்றியும் உணர்த்துதல் சிறப்பு வினையாயும் நுதலுதல் பொதுவினையாயும் அமைதலின் தத்தம் பொருளைக் குறித்து வருதலே இயலும். மேலும் உணர்த்துதல் என்பது சூத்திரக் கருத்தாகக் கூறப்பட்டனவற்றைத் தழுவிய ''என்பது'' என்னுஞ் சொல்லையும், நுதலிற்று என்பது ''என்னுதலிற்றோ'' என்பதையும் அவாய் நிற்றலின் பொருள் முடிவு வேறு வேறாய் நிற்றல் தெற் றெனப் புலப்படும்.

எடுத்துக் காட்டாக முதல் சூத்திரத்து, ''என்பது சூத்திரம்; என்னுதலிற்றோ வெனின் சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாக வுடைத்திவ்வுலகம் என்பதுணர்த்துதனுலிற்று'' என்பதைக் காண லாம். இதனுள் ''என்பது சூத்திரம்'' என்றது மெய்கண்ட தேவ நாயனார் அருளிய மொழிபெயர்ப்பாகிய சூத்திரத்தைக் குறித்து நின்றது. ''என்னுதலிற்றோ'' என்றது சூத்திரக் கருத்தைக் குறித்து நின்றது. ''சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்திவ் வுலகம்'' என்பது சூத்திரக் கருத்து இதுவென அறிவிப்பது. ''என்பது உணர்த்துதல்'' என்றது முதனூற் சூத்திரக் கருத்தெனக் காட்டி நின்றது. ''நுதலிற்று'' என்றது மெய்கண்ட தேவ நாயனார் சூத்திரக் கருத்தை அறிவிப்பது. எனவே ''என்னுதலிற்றோ வெனின் சங்கார

காரணனுயுள்ள முதலேயே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதாகிய முதனூற் சூத்திரம் உணர்த்துதலே மொழிபெயர்த்து நுதலிற்று'' என்பது அத்தொடர்ப் பொருளாகும்.

இதனுற் பெறப்படுவது, மொழிபெயர்ப்பு, ''சங்கார காரணனுகிய இவ்வுலகம்'' என்னுங் கருத்துவகை பற்றி மேற்கொள்ளப்பட்டது என்பதாகும்.

இனிச் சிவஞான போதம் பன்னிரண்டாஞ் சூத்திர இறுதி உதாரண வெண்பாவில், ''ஒண்குருவாலின்றிந் நூன் மும்மை மலர்க்கு'' என்ருர். அஃதாவது இச்சிவஞானபோத நூல் அநுபவமுள்ள தேசிகனுல் மும்மலமுடைய சகலர்க்குப் போதிக்கப்படும் என்பது அதன் பொருளாகும். தம்நூலிற் கூறியபடியே ஒண்குருவாகிய மெய் கண்ட தேவ நாயனுர் தம் மாணுக்கர்க்குச் சிவஞான போதத்தைப் போதித்துச் சந்தானத்தை ''இக்குவலயத்தில்'' ஆரம்பித்து வைத் தார். அவர் காலத்திருந்து பரம்பரையாக உபதேசக் கிரமமாக அச் சந்தானம் வருவதாயிற்று. எனவே மெய்கண்ட தேவநாயனுர் உப தேச நிலேயில் எச்செய்திகளேக் கூறினுரோ அச்செய்திகளே அப்பரம் பரையில் வருவனவாகலான் அச்சந்தானத்தார் கூறுவன மெய்கண்ட தேவநாயனுர் கூற்ருய் அமைந்து வரலாருகும். எனவே அச்சந்தான பரம்பரையினரல்லாத காரணமுடையார் முதலியோர் தத்தங் கருத்துக் கேற்பக் கூறுவன உண்மைக்குப் புறம்பான செய்திகளாகும்.

மெய்கண்ட தேவ நாயனுர் பாயிரத்துள் எண்வகையாக வரை யறுக்கப்பட்ட செய்திகளேயே கூற இயலுமாகலின், நூலின் வரலாறு கூறுமிடத்து ''நந்தி முனி கணத்தளித்த வுயர் சிவஞான போதம்'' என்று மட்டுமே கூறினுர். நாந்தி வெண்பாவில் நந்திதேவரிடமிருந்து சனற்குமரமுனிவர் பெற்ற செய்தியைக் கூறினமையான் பாயிரத்துள் ''முனிகணம்'' என அதனே அநுவதித்தார். மற்றைச் செய்திகளே மாணுக்கர்க்கு உபதேச வாயிலாக உணர்த்தினுர். அவருடைய முதன்மை மாணவராகிய அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் வட மொழிச் சிவஞான போதத்தைப் பெற்ற நந்தி தேவர் இவரென. ''முன்னுள் இறைவனருணந்தி தனக்கியம்ப நந்தி-கோதிலரும் சனற்கு மாரற்குக்கூறக் குவலயத்தி னவ்வழியெங் குருநாதன் கொண்டுதீதகல வெமக்களித்த ஞானநூலே'' எனக் கூறினுர்.

இதனுல் முதனூலாசிரியர் இறைவனுகிய சிவபெருமானே என்பது பெறப்படும். ஆசிரியர் மெய்கண்ட தேவ நாயனுர் நாந்தி வெண் பாவிற் கூறிய ''நந்தி உரைத்தருளு ஞான நூல்'' என்பதனே உடன்பட்டு ஞானநூலின் மொழிபெயர்ப்பாகிய நூலும் ஞானநூலே யாகலின், ''தீதகல வெமக்களித்த ஞான நூலே'' என்ருர்.

அப்பரம்பரையினராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள், மெய் கண்ட தேவர் வாயிலாக வந்த செய்திகளையே ''தேவர் பிரான் வளர் கயிலை'' என்னுஞ் செய்யுளில் விரித்துக் கூறினர். அச்செய்யுளால் மெய்கண்ட தேவ நாயனருக்கு ஆசிரியராகிச் சிவஞான போதத்தை உபதேசித்தவர் பரஞ்சோதி மாமுனிகளென்பதும், அவருக் குபதேசித்தவர் அவராசிரியராகிய சத்தியஞான தரிசனிகள் என்பதும், அவருக்குபதேசித்தவர் அவராசிரியராகிய சனற்குமாரர் என்பதும் அவருக்குபதேசித்தவர் அவராசிரியராகிய திருநந்திதேவர் என்பதும் அச்செய்யுளாற் பெறப்பட்டனவாகும். இவ்வாறு மெய்கண்ட தேவராற் குறிக்கப்பெற்ற ''முனிகணம்'' என்றதன் கருத்தை விரித்துரைத்தார். இயைபு பற்றி மெய்கண்ட தேவ நாயனர் முதல் தம்வரையுள்ள சந்தானத்தையுங் கூறினர். நூலையே உபதேசப்பொருளாக மெய் கண்ட தேவநாயனர் உடன்பட்டமையின் நந்தியெம் பெருமானிட மிருந்து உபதேசமாக வந்த நூலும் சிவஞானபோதம் என்பதும் உமாபதி சிவாசாரிய சுவாமிகளின் கருத்தாதலும் அறியப்படும்.

எனவே அருணந்தி சிவாசாரிய சுவாமிகளும் உமாபதி சிவா சாரிய சுவாமிகளும் மெய்கண்ட தேவநாயனர் உபதேசப்படியே வரலாற்றைக் கூறினர்கள் என்பது பெறப்படும். அதுபற்றிக் காரண முடையார், ''ஸ்ரீ கண்டருத்திரர் நந்திதேவருக்கு ரௌரவ ஆகமத்தில் ........ பன்னிரண்டு வடமொழி சூத்திரங்களை உபதேசித்தார் என்றும் அவற்றை முறையே சநற்குமாரரும் சத்தியஞான தரிசனிகளும் பரஞ் சோதி முனிவரும் உபதேசத்தில் பெற்றனர் என்றும் பரஞ்சோதி முனிவர் மெய்கண்டாருக்கு உபதேசித்தார் என்றும், மெய்கண்டார் தமக்குக் கிடைத்த பன்னிரண்டு வடமொழி சூத்திரங்களைத் தமிழில் மொழிபெயர்த்துச் சிவஞானபோதம் என்றும் பெயர் வைத்தார் என்றும் கூறப்படுகிற வரலாறு பொய்யாக இருப்பினும்'' என எழுதியது உண்மைக்கு மாருன அப்பட்டமான பொய்யாகும் என்பது வெள்ளிடை மலை.

பஞ்சாக்கர தேசிகருக்குப் பின் பட்டமேறிய அம்பலவாண தேசிக சுவாமிகள், ''முன்னவன் வடநூனேக்கி மொழிந்தனன் போதம்'' எனத் தசகாரியத்துட் கூறியதும், அவரிடம் உபதேசம் பெற்ற உலகுடைய நாயனரும், ''முந்துமா கமத்தை யருட்டுறை யண்ணல் மொழிபெயர்த் துரைத்தநூன் முதலா'' எனக்கழி நெடிலுட் கூறியதும் பின்னர் அப்பரம்பரையினராகிய மாதவச்சிவஞான யோகிகள் பாடியத்துள் விரித்துக் கூறியனவும் மெய்கண்ட தேவநாயனர் முதல் உபதேசக் கிரமத்தில் வந்த செய்திகளே யாகலின் அவை பிரமான மாகச் சரித்திரமாகின்றன. எனவே அச் சந்தானமல்லாதார் கூற் றெல்லாம் கேவலம் யூகங்களே யாகலின் சரித்திரமாகாது பொய்யாய் முடியும்.

அங்ஙனமாயின் மொழிபெயர்ப் பென்று வெளிப்படையாக ஏன் கூறவில்லை என்றும் தற்போது வெளியிடப் பெற்றுள்ள இரௌரவத் துள் ஏன் காணப்பட வில்லை என்னும் ஐயங்கள் எழலாம்.

120 காரணங்களென்னும் கட்டுரைக்கு முன்னவராகிய கா. சுப்பிர மணியபிள்ளை என்பவர் தமது ''மெய்கண்டாரும் சிவஞான போதமும்'' என்னும் புத்தகத்தில், ''தமிழிலுள்ள திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த போப்பையர் அதனைத் தமிழ்த் திருவாசகமென்றும் தமது மொழி பெயர்ப்பை ஆங்கிலத் திருவாசக மென்றுங் கூறினு ரில்லை. யாண்டும் அவ்வாறே யாகும். ஒரு மொழியிலிருந்து ஒருநூலை மொழிபெயர்ப்பவர் நூலின் பெயரோடு மொழிப்பெயரையும் இணைத்துக் கூறுவது வழக்கமில்லை'' (பக் 18-19; பதிப்பு - 1932) என்ருர். எனவே அம்முறையே ஆசிரியர் தந்நூலை மொழிபெயர்ப்பென்று கூறவேண்டிய அவசியம் இல்லை என்பது பெறப்படும்.

அன்றியும் மேலே கூறப் பெற்றவைகளால் மெய்கண்ட தேவ நாயனுரும் ஆண்டாண்டு வழி நூலென்பதையும் மொழிபெயர்ப் பென் பதையும் தெற்றென உணரவைத்தமையின் ''வெளிப்படையாகக் கூறவில்லை'' என்பதும் பெறப்படும். பொருந்தாது.

மேலும் ஆசிரியரே மொழிபெயர்த்தவராகலின் அவர்க்கு ஐய மின்மையின் கூறவேண்டிய நிலை எழவில்லை. இன்னும் ''பாவனு தீக்கை செய்து மாணுக்கனுக்குச் சிவஞான போத சாத்திரத்தைக் கொடுக்க'' என்ற ஆகம வாசகத்தான் மந்த புத்தியுடையோரும் அச்சிவஞான போதத்தின் மொழி பெயர்ப் பென்பதை உணர்வா ராகலின் அதனை மீண்டு மீண்டுங் கூறுதலாற் போந்த பயன் என்னையோ?

இன்னும் இந்நூல் நிர்வாண தீக்கையுடையாருக்கு உபதேசமாகக் கொடுக்கப்பட்டு வந்தது. எனவே பொது வெளியீடு இல்லை. மிகவும் இரகசியமாகப் பாதுகாக்கப் பட்டு வந்த நூல். எனவே காரண முடையார் முதலியோருக்கு வேண்டாவழி எழும் ஐயங்கள் ஆண்டு எழுதற்குக் காரணமின்மையானும் கூறப்படவில்லை. அன்றியும் உய்த் துணர வைத்தல் என்பது எல்லோரானும் உடன்பட்ட உத்தியாகலின் பெறப்பட்ட ஒன்றைப் பின்னரும் ''வெளிப்படையாக'' என்பது வெறும் பிதற்றலாய் முடியும்.

இனிக் காமிகம் தந்திராவதாரப் படலத்துள் ''இரௌரவம் எட்டற்புதக் கணக்காய் பிராம்மணேசர் என்பவருக்கு உபதேசிக்கப் பட்டது. அவரிடத்திலிருந்து நந்திகேசர் உபதேசிக்கப் பெற்றனர். காலாக்னம், கலாதீதம், இரௌரவம், இரௌரவோத்தரம், மகாகாள மதம், ஐந்திரம் என இரௌரவாகமமானது ஆறு உட்பிரிவை

யுடையது'' என்று கூறப்பெற்றுள்ளது. எனவே இரௌரவம் என்பது கோடிச் சுலோகங்களைக் கொண்டது என்பதும் ஆறு உபாகமங்களைக் கொண்டது என்பதும் பெறப்படும்.

எனவே இரௌரவம் என்ற பெயருடைய உபாகமம் ஒன்றிருப்ப தாலும் தற்போது வெளியிடப் பெற்றவைகளில் எண்பது கோடிச் சுலோகங்கள் காணப்படாமையாலும் தற்போது வெளியிடப் பெற்றது. இரௌரவம் என்ற பெயருடைய உபாகமமே என்பது பெறப்படும். ''தற்போது வெளியிடப்பெற்றவைகள் அசிதம் இரௌரவம் மிருகேந் திரம் என்னும் ஆகமங்களின் பகுதிகளே'' என்று திரு. மு. அருணா சலம் காமிகாகம முகவுரையுட் கூறியுள்ளமையும் மேற்கூறியவற்றை வலியுறுத்தும். எனவே தற்போதைய வெளியீட்டில் காணப்படாமை யின் இல்லை எனச் சாதிப்பது அறிவுடைமையாகாது.

அன்றியும் காண்டலளவை ஒன்றே கொண்டு துணிவது உல காயதர் கொள்கையாகும். எனவே காணப்படவில்லை என்பது ஒரு காரணமாகாது. அனுமான ஆகமப் பிரமாணங்களால் பெறப்பட்டவை களைக் காணப்படவில்லை என்பது கொண்டு மறுத்தல் அறிவுடைமை ஆகாததோடு வாதமுமாகாது. ''பாவனா தீக்கை செய்து மாணாக் கனுக்குச் சிவஞானபோத சாத்திரத்தைக் கொடுக்க'' என்ற ஆகம அளவையான் பெறப்படுதலின் உ ல கா ய த ரே காணப்படவில்லை என்பர்.

எனவே மெய்கண்ட தேவ நாயனர் வாக்கானும், அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் வாக்கானும் தீக்கைவிதிப் படல ஆகம வாக் கானும், ஐதிகப் பிரமாணத்தானும் இவ்வாறு எல்லா வகைப் பிரமாணங்களானும் வடமொழிச் சிவஞானபோதம் முதல்நூல் என்பதும் தமிழ்ச் சிவஞான போதம் மொழிபெயர்ப்பாகிய அதன் வழிநூல் என்பதும் அம்மொழிபெயர்ப்பும் கருத்து வகையான் மொழி பெயர்க்கப் பட்டதென்பதும் வெள்ளிடை மலையாய் விளங்கும்.

இனித் தமிழ்ச் சிவஞான போதம் முதனூலே என்று சாதிப்பார் மதம் பற்றி ஆராய்தலும் உண்மை வெளிப்படை உறுதுணை செய்யும். ஜெ.யெம். நல்லசுவாமிப் பிள்ளையவர்கள் சைவ சித்தாந்த மகா சமாஜ உதவிச் சபைத் தலைவராக இருந்தவர்கள். அவர்கள் ''சிவ ஞானபோத வசனாலங்கார தீபம்'' என்னும் நூலுக்கு முகவுரை எழுதியுள்ளார்கள். அம்முகவுரையுள் தமிழ்ச் சிவஞான போதம் முதனூலே என்னுங் கருத்து எப்பொழுது எவ்வாறு கருப்பிடித்தது என்பது பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். அஃதாவது, ''இக்கருத்து எதுமுதல் உற்பத்தியாயினதென்பது எமக்குத் தெரியும். காலஞ் சென்ற திருவனந்தபுரம் பண்டிதர் பி. சுந்தரம்பிள்ளையவர்கள் எம்.ஏ. எம்முடைய சிவஞானபோத ஆங்கில மொழி பெயர்ப்பைப் பற்றி

''ஹிந்து'' என்னும் சென்னைத் தினசரிப் பத்திரிகையிலே எழுதிய பதிப்புரையிலே இக்கருத்து முதலில் வெளி வந்தது. அதற்கு முன் இக்கருத்தை யாரும் வெளியிடவில்லை. அப்பொழுதே நாம் பிள்ளையவர்களுடன் தர்க்கித்து மறுத்துள்ளோம். அது முதலே சில நண்பர்கள் இக்கருத்தைத் தழுவி வருகின்றூர்கள் என்பதாம்.

எனவே ''தமிழ் முதனூல்'' என்பது தற்காலத்திலே அஃதாவது இந்த இருபதாவது நூற்றுண்டிலே ''ஆராய்ச்சி'' என்ற இடத்திலே கருவுற்றுச் சிலரது கட்டுரைகளில் கொஞ்சங் கொஞ்சமாகத் தலைகாட்டிச் சில ஆண்டுகளுக்குள் மெய்ப்பாடு நிரம்பிய பல விவரங்களோடு (full graphic details) 120 காரணங்கள் என முழு உருப்பெற்றுப் பிரசவிக்கப்பட்டது என்பது அறிவுடையோர் எல்லோரும் கண்ட உண்மையாகும். எனவே மெய்கண்டார் காலத்தோ அதற்குப் பிற்பட்ட காலத்தோ அந்தோ 19-ம் நூற்றுண்டு வரையும் ''தமிழ் முதனூல்'' என்ற கருத்து இல்லை என்பது தெளிவாகும். 120 காரணமுடையார் இல்லாத ஒன்றை நிரூபிக்க இவ்வளவு சிரமத்தை மேற்கொண்டிருக்க வேண்டியதில்லை.

120 காரணமுடையார் கருத்துக்குச் சான்ருக ஒரு செய்தி முகவுரையுள் குறிக்கப் பெற்றுள்ளது. ''எல்லா ஆகமங்களும் சிவபெருமானல் நந்தி தேவருக்கு உணர்த்தப்பட்ட காலத்துச் சிவபெருமான் இரௌரவத்திலுள்ள ஞான பாதத்தை உணர்த்த மறந்து விட்டாரா? அல்லது நந்திதேவர் தூங்கி விட்டாரா?'' என்பதாகும். அடாடா! என்ன அழகான கேள்வி! சிவபெருமான் மறத்தலும் நந்திதேவர் தூங்குதலும் உண்மைக்கு மாருன அசம்பவங்கள் ஆகுமே. அசம்பவம் வினவாகவோ விடையாகவோ வர இயலுமா? தவறுடைய கேள்வி எழுப்புதல் கேள்வி எழுப்புவாருடைய அறிவுத் திறத்தை அளக்கும் அளவு கோலாயன்றே முடியும்! இஃதறியாது அசம்பவத்தை மெச்சுதலும் தகுமோ! பாடியகாரர் பாயிர ஆசிரியர் இவரெனக் காட்டியும் உணர்ந்து கொள்ளாமல் தூங்கிக் கொண்டிருக்கும் இவர்கள் நந்திதேவர் தூங்கினுரா எனக் கேட்டல் என்னே அருமை! நந்தியெம் பெருமான் சித்தாந்தத்தின் உண்மையை ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுக் கேட்டார் என்றலன்றே பெருந்தன்மையும் அறிவுடைமையும் ஆகும். சித்தாந்தம் உயர்ந்தது என்று கூறும் இவர்கள் சித்தாந்த ஆசிரியர்களின் வாக்கை முறையோடு படிக்காமையால் விளைந்த விபரீதமே இது. இவர்கள் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளின் திருவாக்கை மேலெழுந்த வாரியாகப் படித்திருந்தாலும் விடை கிடைத்திருக்குமே! பரபக்கத்துள், ''போத மிகுத்தோர் பேதைமைக்கே பொருந்திஞேரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல ஏதுநெறி யெனுபவர்கட் கறிய முன்னுள் இறைவனருனந்திதனக் கியம்ப'' (செய்-9) என்று காரணத்தை வெளிப்படையாகக் கூறியும்

அறிய மாட்டாது தூங்கியது வியப்பன்று அஃதவர்க்கு இயல் பேயாம். எனவே ''அவ்வளவின் அவன் மகிழ்க'' என்னும் நியாயம் பற்றித் தள்ளப்படும்.

மேலும் முகவுரையுள் இன்னொரு பேராசிரியர், ''நமக்கு வட மொழியில் எழுந்துள்ள முதல் நூல்களும் தமிழில் எழுந்துள்ள முதல் நூல்களும் ஒப்ப பிரமாணமே'' என்ருர். அவ்வாறு கூறுங்கூற்றுக்க ளெல்லாம் ''அருமறை யாகமம்,'', ''வேதநூல் சைவநூல்'' என்னும் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் திருவாக்குகளால் பொய் யாய் முடிதல் ஏற்கனவே நிறுவப்பட்டதாகும்.

இனித் தமிழ்ச் சிவஞான போதம் முதல் நூலாயின் நூலின் பெயரையாவது தமிழிற் கூறியிருக்கலாமே! அவ்வாறு கூருது வட மொழிச் சொற்களைப் பயன்படுத்தியது முரணுகுமே. நூலின் பெயரையே தமிழிற் கூருதிருக்கவும் தமிழ் முதல்நூல் என்பது பொருந்துமா?

மேலும் ஆங்காங்குப் பற்பல வடசொற்களை மெய்கண்ட தேவ நாயனுர் உபயோகித்துள்ளாரே! 120 காரணமுடையாரும் 48வது காரணத்தில், ''மதுரைச் சிவப்பிரகாசர் காலத்திலும் சிவாக்கிர யோகிகள் காலத்திலும் . . . தமிழ் நூல்களில் வடமொழி கடல்மடை திறந்தாற்போல நுழைந்தது'' என ஆய்ந்து கண்டுள்ளார்! எனவே மெய் கண்ட தேவ நாயனுர் காலத்தில் தமிழ் நூல்களில் வடமொழி நுழையவில்லை என்பது அவர் கருத்தென்பது அறியப்படும். வடமொழி நுழையாத காலத்திலே, அறிஞர்கள் மட்டுமே விளங்கிக் கொள்ளக் கூடிய வடமொழிச் சொற்களைப் புகுத்திய காரணம் யாதோ?

மேலும் இக்காலத்துச் சைவப் பேராசிரியர்கள் இறை, உயிர், தளை என்ற சொற்களையே பயன்படுத்துகின்றனர். இந்த அளவிற்கும் தமிழ் அறியாதவரா மெய்கண்ட தேவ நாயனுர்! இவ்வாருன தமிழ்ச் சொற்கள் இருக்கவும் வடமொழிச் சொற்களைத் தமிழ் முதனூலார் கொள்கைக்கு விரோதமாகப் பயன்படுத்தலாமா? அல்லது அக்காலத்துத் தமிழ் நாட்டினர்க்குத் தமிழ்ச் சொற்களில் கூறினுல் விளங்காதா? வடசொற்கள்தாம் விளங்குமா? முதல் நூல் செய்ய வந்தவர் குறி யீட்டுச் சொற்களைத் தாமே படைத்துப் பயன்படுத்தி இருக்கலாமே? ஏன் அவ்வாறு செய்யவில்லை?

பதிப்புரையுள், ''சைவசித்தாந்தம் தமிழர் அறிவில் பண்பாட்டில் அனுபவத்தில் மலர்ந்த சமயம்'' என்று கூறப்பட்டுள்ளது. சைவ சித்தாந்தம் என்ற சொல்லே வடமொழிச் சொல்லாகும். அவ்வாறு வடமொழித் தலைப்பை உடன்பட்ட சமயம் தமிழர் அறிவில் பண்

பாட்டில் அனுபவத்தில் மலர்ந்து என்பது பொருந்துமா? ஒரு தமிழ்ப் பெயர் கிடைக்கவில்லையா? சிவப்பு என்னும் அடிப்படையில் சிவம் என்றும் முடிந்த முடிபு என்பது சித்தாந்தம் என்றும் விளக்கும் அவர்கள், ''சிவப்பில் மலர்ந்த முடிந்தமுடிபு'' எனப்பெயர் சூட்டிக் கொள்ளாது வடமொழிப் பெயரை உபயோகிக்கலாமா?

இவ்வாறு தமிழர் அறிவில் பண்பாட்டில் அநுபவத்தில் மலர்ந்த சமயத்தைப் படைக்க முற்பட்ட மெய்கண்டார் வேதம் முதலியவற்றில் கூறப்பட்டவைகளையும் தழுவிச் சென்றுள்ளாரே!

''அக்கரங்களின்ரும் அகரவுயிரின்றேல் - இக்கிரமத்தென்னும் இருக்கு'' (சூ5:அதி1) என்று இருக்கு வேதத்துள் கூறப்பட்டதற்குத் தாற்பரியம் கூறியுள்ளார்.

ஆண்டே ''பண்ணையு மோசையும்'' என்னும் வெண்பாவில், ''அத்துவித மாதல் அருமறைகள் ஒன்றென்னது அத்துவித மென்ற றையும் ஆங்கு'' என்று அருமறைகளின் கருத்தை வேண்டினர்.

''மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த தென்னுமறையி னியல் மறந்தாய்'' (சூ5 : அதி 2) என்று வேதத்திற் சொல்லப்பட்ட இயல்பை ஞாபகப்படுத்தியுள்ளார்.

''ஒண் கருட சானத்திற் றீர்விடம் போற்ருன்'' (சூ 9 : அதி 2) என்று வேதத்துட் கூறப்பட்ட கருட தியானத்தை ஒப்புமை கூறி யுள்ளார்.

இவையெல்லாம் ''வெளிப்படையாகத்'' தழுவிய பகுதிகள். உய்த்துணர வைத்தல் என்னும் உத்தியான் பல இடங்களில் வேதா கமங்களைத் தழுவிச் சென்றுள்ளாரே!

தமிழ்ச் சமயங் கூற வந்தவர் வேதக் கருத்துக்களை உடன்பட்டுச் செல்ல வேண்டிய அவசியம் ஏன் வந்தது? வேதத்தைத் தழுவவில்லை என்ருல் தமிழர் சமயம் சமயமாகாதா?

இன்னோரன்னவைகளை அவர்களே சீரிய முறையில் சிந்தித்திருந் தால் விபரீத முடிவிற்கு வந்திருக்க மாட்டார்கள்.

இனிச் ''சிவஞான போதம் முதல்நூலே'' எனச் சாதிப்பானெழுந்த 120 காரணங்களையும் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளின் திரு வாக்குப்பற்றிப் போதையர் கூற்றெனத் தள்ளத் தக்கதாயினும் விபரீதத் திற்கு உதாரணமாய் அமைதலின் அவைகளையும் ஆய்தல் விபரீத நீக்கத்திற்கு உதவும். அதனை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

முதல் அறுபது காரணங்கள் முதற்பகுதியாகவும், 61 முதல் 119முடிய வுள்ள 59 காரணங்கள் இ ர ண் டா வ து பகுதியாகவும், 120வது காரணம் மூன்ருவது பகுதியாகவும் கொள்ளலாம்.

முதற் பகுதி, ''வடமொழி தமிழ் மொழிகளில் நல்ல புலமை யுடைய'' சிவாக்ர யோகிகளே த மி ழி லி ரு ந் து வடமொழிக்குப் பெயர்த்தார் என்று கூறுவது. இரண்டாவது பகுதி அதனை மறுப்பது. காரணங் கீழ்க்கண்டவாறு.

120 காரணமுடையார் சிவாக்ர யோகிகளை, ''வடமொழி தென் மொழிகளில் நல்ல புலமையுடையவர்'' (காரணம் 51) என உடன் பட்டார். ஆயின் வடமொழியிற் பெயர்க்கும் போது இரு மொழி களிலும் புலமை இல்லாதவரும் குறை கூறும்படி மொழி பெயர்ப்புச் செய்திருக்க மாட்டார். ஆகவே 59 காரணங்களால் மொழி பெயர்ப் பில் குற்றம் கண்டவர்க்கு இருமொழிகளிலும் புலமையுடைய சிவாக்ர யோகிகள் மொழிபெயர்த்தார் என்பது முரணும் முடியும். நல்ல புலமையுடையவர் 59 காரணங்களால் குற்றமாகக் கருதப்பட்ட மொழி பெயர்ப்புக்கு ஆசிரியராக இருக்கமாட்டார் என்னுங் கருத்தே அவ் வாராய்ச்சியால் வலியுறுத்தப்படுவதாய் முடியும். எனவே இரண்டாம் பகுதி முதற்பகுதியை ம று த் த தா ய் முடியும். இவ்வாறு தன் கருத்தைத் தானே மறுப்பது உறுத்தவே மூன்ருவது பகுதி ''வட மொழி தமிழ் மொழிகளில் நல்ல புலமையுடைய சிவாக்ர யோகிகள்'' மாறுபாடுகளைப் புகுத்திய காரணங் கூறுவதாய் அமைந்தது. இவ் வாறு பருப்பொருட்டாய்க் காணும்போதே முன்பின் முரணெடு கூடிய தென்பது பெறப்படும். இது 120 காரணத்தின் தனிச்சிறப்பு.

மேலும் காரணமுடையார் வெளிப்படையாகக் கூருத காரணத் தால் ''மொழிபெயர்ப்பல்ல'' எனச் சாதிக்கும் இயல்பினர். ''வெளிப் படையாகக் கூருதவற்றை உடன்பட இயலாது'' என்பது கொள்கை யானுல் அவர் முதற்கண் ஆராய வேண்டியது வேறு. ஆசிரியர் நூலுள் எவ்விடத்திலும், ''மெய்கண்டானுகிய யான் இந்தத் தமிழ்ச் சிவஞான போதத்தை முதல் நூலாகச் செ ய் கி ன் றே ன்'' என்று வெளிப்படையாகக் கூறவில்லை. எனவே முதற்கண் இந்த நூலின் பெயர் சிவஞான போதந்தானு? இந்நூலின் ஆசிரியர் மெய்கண்டார் தானு? வெளிப்படையாக முதல் நூல் செய்வதாகக் கூருதபடியால் முதல் நூல் என்பது பொருந்துமா? என்றிவ்வாறு விணுக்களை எழுப்பி யிருக்க வேண்டும். அல்லது அச்செய்திகளைத் தான் உடன்பட்டது எவ்வகைப் பிரமாணங்களால் எ ன் ப தை யா வ து விளக்கியிருக்க வேண்டும். (அருணந்தி சிவாசாரிய சுவாமிகளும் சிவஞானபோதம் செய்ததைக் கூறவில்லை) ஆனுல் அவருக்கு இவ்வாறு கேள்விகளைக் கேட்டுக்கொண்டு ஆரம்பிக்க வேண்டும் என்று தோன்றவில்லை.

எனவே இவரது வாதமுறை, அன்றுமுதல் இன்றுவரை நிலவிவரும் உண்மைகளை மறுக்க வேண்டும் என்ற பிடிவாதத்தையே காட்டு கின்றது.

அன்றியும் காணப்படவில்லை என்பதால் இல்லை எனச் சாதிக்கும் இவருடைய கொள்கையின் அடிப்படை காட்சி அளவை ஒன்றே பிரமாணம் என்பதை வெளிப்படுத்துகின்றது. கருதல் உரை முதலிய வற்றைப் பிரமாணங்களாக இவர் கொள்ளவில்லை. சைவ சித்தாந்தி களுக்கு மூன்றும் பிரமாணங்களே. காட்சி அளவையை மட்டும் உடன்படுதல் என்பது உலகாயதர் கொள்கை. இவ்வாறு அக் கொள்கையைத் தழுவிக் கொண்டு சைவ சித்தாந்தஆராய்ச்சியை மேற் கொள்ளுதல் வெறும் ஆரவாரமாய் அமையுமேயன்றி உண்மையைக் காணும் நோக்கமுடையதாக அமையாது. எனவே இவரது கூற்றுக்கள் எல்லாம் விதண்டையாய் முடிகின்றன. இனி அக்காரணங்களுள் முக்கியமானவைகளைக் காண்போம்.

காரணம் ஒன்று:- தாம் அருளியது முதல் நூல் அல்ல மொழி பெயர்ப்பே என்று மெய்கண்டார் எங்கும் கூறவேயில்லை.

விடை:- ஆசிரியர் தாம் அருளியது தமிழ் முதல் நூலே மொழி பெயர்ப்பல்ல என்றும் எங்கும் கூறவில்லை. அவ்வாறு ஆசிரியர் கூறா திருக்கவும் அவர்தம் கருத்திற்கு மாறுபட ஆய்தலன்றோ ''மிகப் பெரிய மோசமும் குற்றமும்'' ஆகும்.

கா-2 : தாம் மொழி பெயர்த்தது உண்மையானால் அந்தச் செய்தியை அவசியமாகக் கூறவேண்டிய இடங்கள் மிகுந்த பொருத்தத்தோடு கூறக் கூடிய இடங்கள்பலவற்றுள் ஓரிடத்திலேனும் தவிராமற் கூறியிருப்பார்.

விடை:- ஆசிரியர் தமிழ் முதனூல் செய்தது உண்மையானால் அந்தச் செய்தியை... தவிராமல் கூறியிருப்பார். ஆனால் அவ்வாறு யாண்டுங் கூறவில்லை. ஆனால் வழிநூல் என்பதைக் காட்ட வேண்டிய இடங் களில் காட்ட வேண்டிய முறையில் காட்டியுள்ளார். விளக்கம் முன்னர்க் காட்டப்பட்டது.

கா-4 : முதன் முதலாகக் கடவுள் வாழ்த்தில் வடமொழி சூத்திரங்கள் வந்த வரலாற்றைக் ''கல்லால் நிழல் மலைவில்லார் அருளிய'' என் பதன் பின் ''சொல்லாறிரு தொடர் வல்லார் அடிதொழ'' எனக்குறித்து விட்டுப்பின்பு ''பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே'' என்று முடித்திருக்கலாம்.

விடை : இவர் கூறுமாறு ''சொல்லாறிரு தொடர் வல்லார் அடி தொழ'' என்பதைச் சேர்த்தால் பாடியத்துட் காட்டிய நயங்களெல் லாம் இல்லாத செய்யுளாய் முடியும். எனவே ''நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கிய'' அழகும் ஒழியும்.

அன்றியும் ''சொல்லாறிரு தொடர்'' என்பது வடமொழிச் சிவ ஞான போதத்தையும், ''வல்லார்'' என்பது நந்தியெம் பெருமானையும் எவ்வாறு குறிக்கும்? இவ்வாறு யாம் கருதுமாறு அவர் கூறியிருக்க வேண்டும் என்பது காரணமுடையாருக்குரிய குதர்க்க வாதமாகும்.

கா-6 : இதற்கு முற்றிலும் மாருக முதல்நூல் செய்கிற ஆசிரியர் ஒருவர் எப்படி அவையடக்கம் கூறுவாரோ அப்படியே தாமும் கூறி யிருக்கிருர்.

விடை : முதல் நூல் செய்கிற ஆசிரியர் ஒருவர் செய்த அவையடக்கம் ஒன்றை எடுத்து ஒப்பிட்டுக் காட்டவில்லை. எனவே இக்காரணம் பொய்யாய் முடிகின்றது. ''முதல் நூல் செய்கிற ஆசிரியர் அவை யடக்கம் கூறவேண்டிய அவசியமே இல்லையே!

கா-7 : தாம் மொழிபெயர்த்தது உண்மையாயிருந்தால் வடமொழியில் முதல் சூத்திரத்தில் இல்லாத ''என்மனுர் புலவர்'' என்ற சொற் களைச் சேர்த்திருப்பது மிகப்பெரிய மோசமும் குற்றமும் ஆகும்.

விடை : இருகாரணங்களுக்காக ''என்மனுர் புலவர்'' என்பதை ஆசிரியர் சேர்த்தார். ஒன்று முதனூல் ஆரும் சூத்திரத்தில் ''இசைக்கு மன்னுலகே'' என்ற பகுதியைத் தந்துரைத்தல் என்னும் உத்திப்படி முதல் சூத்திரத்திலுங் காட்டினுர் என்பது. இரண்டாவது அவ்வாறு கூறும் பொழுது தாம் செய்வது வழிநூலென அறிவுறுத்தல் என்னுங் கருத்துப் பற்றியும் கூறினுர் என்பது. ஆயின் ஆருஞ் சூத்திரத்திற் கூறப்பட்டதையே முன்னருங் கூறுதல் ''கூறியது கூறல்'' என்னுங் குற்றமாகும். இரண்டாவது காரணத்திற் காட்டிய பயன்நோக்கிக் கூறியது கூறல் தவிர்க்கப்பட்டது.

இனிக் காரணமுடையார் கூறுமாறு மெய்கண்டார் முதல்நூல் செய்ததாகக் கொண்டால் முதற்சூத்திரத்திற் கூறியதை மீண்டும் ஆருஞ் சூத்திரத்திற் கூறியது ''கூறியது கூறல்'' என்னுங் குற்ற முடையதாகும். இவ்வாறு குற்றமுடையதாகும் என்பதை அறியார். ஆகலின் அக்குற்றத்தைத் தவிர்க்க இவர் யாண்டும் விளக்கம் கூற வில்லை. ஆசிரியர் மொழிபெயர்த்தது உண்மையாகலின் தக்கவிடை கிட்டியது.

இவ்வாறு தாங்கொண்டதைச் சாதிக்க வேண்டும் என்னும் ஆர் வத்தால் ஆசிரியர் மீது கூறியது கூறல் என்னுங் குற்றத்தை ஏற்றிய பெருமை இவரைச் சேர்கின்றது.

கா-8 : உண்மையை மறைப்பதோடு உண்மையல்லாத ஒன்றைக் கூறும் குற்றமும் ஏற்படும்.

விடை : மேலே காட்டப்பட்டவைகளால் இக்குற்றம் 120 காரண முடையார் மேல் நிற்குமன்றி ஆசிரியர் மெய்கண்ட தேவநாயனுரைச் சாராது.

கா-9 : ஸ்ரீகண்டருத்திரர் திருவாக்கை அளவைநூல் உணர்ந்த உலகத்து மக்கள்மேல் வைத்துக் கூறுவது பெருந்தவறு.

விடை : ஒரு பொருளின் சுவையை உண்டவரே அறிவர். எனவே அநுபவம் உள்ளவர்கள் மேல் வைத்துக் கூறுவதே பொருந்தும். ஆனல் அநுபவம் என்பது இறைவனுக்கு இல்லை என்பதே சித்தாந்தம். எனவேதான் ஆருஞ் சூத்திரத்தில் அவ்வாறு ஆன்மாக்கள் மேல் வைத்துக் கூறினர். அம்முறைதான் பொருத்தமுடைத்து. அதனை நன்குணர்ந்த ஆசிரியர் இறைவன் வழியையே பின்பற்றினர். காரண முடையார் சித்தாந்த நுட்பம் உணராமையான் குற்றப்படக்கூறினர். ''பெருந்தவறு'' யாருடையது என்பது நன்கு விளங்கும்.

அன்றியும் ''அளவைநூல் உணர்ந்த ....... மக்கள்'' என்னுந் தொடருக்கும் ''அளவையினியல் புணர்ந்தோர்'' என்னுந்தொடருக்கும் வேறுபாடு மிகப்பெரிது. அது முன்னர் காட்டப்பட்டது. சொல்வேறு பாடு பொருள்வேறுபாடு உணராமைக்கு இஃது எடுத்துக்காட்டாகும்.

கா-10 : சைவர்களுக்கு எல்லையில்லாத நம்பிக்கையைத்தரக்கூடிய பிரமாணமான ஸ்ரீகண்டருத்திரர் திருவாக்கை உலகமக்கள் பசுவாக்காகவே மதித்து ''என்மனர் புலவர்'' என்று திரித்துக் கூறி அவர்களுடைய நம்பிக்கையை வேண்டுமென்றே குலைக்கும் குற்றமும் மெய்கண்டாரைச்சாரும்.

விடை : ஆருஞ் சூத்திரத்தில் உள்ள ஸ்ரீகண்டருத்திரர் திருவாக்கு மேலே விளக்கத்தோடு காட்டப்பட்டது. எனவே ஆசிரியர் ''திரித்துக் கூறவில்லை'' என்பது நன்கு விளங்கும். ''அளவையினியல்புணர்ந்தோர்'' என்பதை ''அளவைநூல் உணர்ந்த மக்கள்'' எனத்திரித்துக் கூறியவர் காரணமுடையாரே. எனவே ''வேண்டுமென்றே குலைக்கும் குற்றமும்'' காரணமுடையாரைச்சாரும்.

அன்றியும் ''சைவர்களுக்கு எல்லையில்லாத நம்பிக்கையைத் தரக்கூடிய'' என்று தம்மைச் சைவர்களிடமிருந்து பிரித்தலின் இவர் சைவரல்லர் என்பது வலியுறுத்தப்படும். படவே சைவரல்லாத இவருக்குச் சிவஞான போதம் முதல் நூலாயிருந்தாலென்ன மொழி பெயர்ப்பாயிருந்தாலென்ன. வேண்டாத ஆராய்ச்சியன்றே!

கா-11: வடமொழியிலுள்ள பன்னிரண்டாவது சூத்திரத்தில் ''ஏவம் வித்யாத் சிவஜ்ஞான போதே சைவார்த்த நிர்ணயம்'' என்ற பகுதியை மெய்கண்டார் தமது பன்னிரண்டாம் சூத்திரத்தில்

அடியோடு விட்டிருக்கின்ருர். தாம் மொழி பெயர்த்தது உண்மை யாஞல் இதை விடாமல் சேர்க்க வேண்டிய அவசியமும் பொறுப்பும் மெய்கண்டாருக்கு உண்டு.

விடை:- பாயிரப் பகுதியுள் பாடியகாரர் மயர்வறுதல் என்பதன் விளக்கங் கூறுமிடத்து ''இஃதென் சொல்லியவாரே வெனின் இவ் விருவகையியல்பும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது ஒரே வொன்றே பற்றி ஐக்கியவாத முதற் பல திறத்தான் வேறுபட்டுத் தம்முள் மாறு கொண்டு மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காது அவற்றின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்தது இந்நூல் என்றவாருயிற் றென்பது'' என்றும், ''சிவஞான போதம் என்றதூஉம் இக்காரணத்தாற் பெற்ற பெயர். ஈண்டுச் சிவஞானம் என்றது அவ்வபரஞானமாகிய சிவாகமமேயாம். போதித் தல் அவற்றின் நிச்சயப்பொருள் இதுவென உணர்த்துதலாம். ஆகவே சைவாகமங்களின் பொருணிச்சயம் உணர்த்துவது சிவஞான போதம் எனக் காரணக் குறியாயிற்றென்றுணர்க. இப்பொருள் வடமொழிச் சிவஞான போதத்துப் பன்னிரண்டாஞ் சூத்திரத்துப் பிற்பாதியிற் கூறியவாறு பற்றி உரைக்கப்பட்டது'' என்ருர்.

பாயிரம் நூல் செய்த பின்னரே செய்யப்படினும் மாணுக்கரின் பொருட்டு நூன்முகத்தே தந்துரைக்கப் படுவதாகலின் பயனுகிய ''சைவர்த்த நிர்ணயம்'' என்பதை பாயிரத்துள் ''மயர்வற....சிவ ஞானபோதம்'' என்பதாற் பெறவைத்தார்.

அற்றுகலினன்றே எண்வகைப் பகுதிகளை விதந்து கூறுமிடத்து ''நாடித் தீர்ந்து கண்டு மயர்வற'' என்பதனல் ''நுதலிய பொருளின் வகையும் பயனும் . . . உணர்ந்து கொள்க'' என்ருர். இவ்வாறு மொழிபெயர்த்த முறையும் பெயர்ப்பும் இடமும் பாடியத்தைப் பார்த் தாலே விளங்கும். இவர்க்குச் சைவ சித்தாந்த நூல்கள் உடன்பாடில்லை யாகலின் உண்மையைக் காண இயலவில்லை.

கா-14 : மெய்கண்டாருடைய தலைமாணுக்கராகிய அருணந்தி சிவா சாரியர் தமது ஆசிரியரை மொழிபெயர்ப்பாளராகக் கூறவில்லை.

விடை : அவர் காலத்தில் ''தமிழ்ச் சிவஞான போதம் முதல்நூலே மொழிபெயர்ப்பல்ல'' என்போர் இலர். எனவே ஐயமோ ஐயமறுத் தற் பொருட்டு விளக்கமோ வேண்டப்படாமையான் கூறவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. தமிழ்ச் சிவஞான போதம் வழிநூலே என் பதும் அதுபற்றி மொழிபெயர்ப்பே என்பதும் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளின் கருத்தாகும் என்பது முன்னரே நிறுவப்பட்டது. மேலும் இவர்தம் குருவாகிய சிவஞான போத ஆராய்ச்சியுடையாரும்,

''அருணந்தியார் சிவஞான போதப்பொருளை ... வடமொழியாளர்க்கு உரிமையாக்குதற் பொருட்டு'' (பக் - 66) என்று கூறுவதாற் றென்மொழி பெயர்ப்பு என்பதை அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் உடன்பட்ட தாகக் கொள்கின்றார் என்பது பெறப்படும். எனவே குருவின் கூற்றையே மறுப்பார்க்குச் சந்தான குரவர்களின் வாக்குகளை மறுப்பதென்பது ஆச்சரியமன்று.

கா-16 : மெய்கண்டார் நூலை முதல் நூல் பிரமாணமாகக் கொள்வதைவிட ஆகம சூத்திரங்கள் பன்னிரண்டையும் அசைக்கமுடியாத பிரமாணமாகக் கொண்டிருப்பார்.

விடை : இஃது இவரது யூகமே. எனவே காரணமாக இயலாது. சிவஞான சித்தியார் தமிழ்ச்சிவஞான போதத்திற்கு விளக்கமாகச் செய்யப்பட்டதென்பதை வெளிப்படையாகக் கூறியுள்ளார்கள். எனவே தமிழ்ச் சிவஞான போதமே சிவஞான சித்தியாருக்கு முதனூலாக இயலும். எனவே சொல்லப்படாதவற்றைக் காரணமாகக் காட்டுதல் அறியாது கூறியதாம்.

கா-17 : வேதத்தைப் பொது என்றும் சிவாகமங்களையே சித்தாந்தம் என்றும் கூறும் இவர் தமது ஆசிரியர் முதல் நூலுக்கு ஒத்த சூத்திரங்கள் பன்னிரண்டு ரௌரவ ஆகமத்தில் இவர்காலத்தில் இருந்திருந்தால் ஒருபோதும் விட்டிருக்கவே மாட்டார்.

விடை : சிவாகமங்களைச் சித்தாந்தம் என உடன்பட்டதால் அச்சொல் கொண்டு 28 ஆகமங்களும் அவற்றுள் ஒன்றாகிய இரௌரவமும் அதன் பகுதியாகிய சிவஞானபோதமும் உடன்பட்ட செய்தியும் தானே பெறப்படும். ''முதல் நூலே மொழிபெயர்ப்பல்ல'' என்ற கொள்கை அவர் காலத்து இல்லாததால் பன்னிரு சூத்திரங்களைப் பற்றிய செய்தியைத் தனியே எடுத்துக் கூறவேண்டிய அவசியம் இன்றாயிற்று. இரௌரவ ஆகமத்தில் அவர் காலத்தில் பன்னிரு சூத்திரங்கள் காணப்படவில்லை என்பதற்குச் சான்று ஏதும் இல்லை.

கா-18:- மெய்கண்டான் நூல் சென்னியில் கொண்டு சைவத்திறத்தினைத் தெரிக்கலுற்றாம் என்று கூறுகிறாரே தவிர ரௌரவ ஆகம சூத்திரங்களையோ அவற்றின் மொழி பெயர்ப்பையோ சென்னியிற் கொள்வதாகக் கூறவில்லை.

விடை:- மெய்கண்டான் நூல் என்பது எதனையும் குறிக்கலாமே. மெய்கண்டான் நூல் என்பது தமிழ்ச் சிவஞான போதத்தைத் தான் குறிக்கும் என வெளிப்படையாகக் கூறவில்லையே. அங்ஙனமாகக் காரணமுடையார் மெய்கண்டான் நூல் என்பது தமிழ்ச் சிவஞான போதம் என எவ்வாறு துணிந்தார்? இவ்வாறு அருணந்தி சிவா

சாரிய சுவாமிகள் ''வெளிப்படையாகக்'' கூருதிருக்கவும் உடன்படச் சம்மதமானல் அவரது ''அருமறை யாகமம்'', ''வேத நூல் சைவ நூல்'', ''போதமிகுத்தோர்'' என்னுந் திருவாக்குக்களைக் கொண்டு மூல நூலையும் மொழி பெயர்ப்பையும் உடன்படுவதில் தயக்கம் என்னையோ?

கா-20:- இந்த சாத்திரத்தில் (இருபாஇருபது) பல வினக்களை விண்ணப்பம் செய்யும் இடத்தில் வடமொழிச் சூத்திரங்களுக்கும் மெய் கண்டார் சூத்திரங்களுக்கும் உள்ள வேறுபாடுகளில் ஒன்றை யேனும் ஒரு வினவிலேனும் எழுப்பவே இல்லை.

விடை:- இதற்குக் காரணம் மிகமிக எளிமையானது. மெய்கண்டார் நூலுக்கும் அதன்முதல் நூலுக்கும் எந்த விதமான வேறுபாட்டையும் அவர் காணவில்லை. இதனைச் சித்தாந்தம் கற்கும் சிருரும் கூறுவர். இவருக்கு விளங்காததுதான் மிக்க ஆச்சரியம்!

கா-21:- குருமரபு கூறும் இடத்திலும் (சித்தி-பரபக்கம்-பாயிரம்10) வடமொழி சூத்திரங்களும் மொழிபெயர்ப்புச் செய்தியும் கூறப்படவே யில்லை.

விடை:- குரு மரபு கூறுவதாகக் கூறினர். குரு மரபு கூறும் இடத்தில் குரு பரம்பரை தானே கூறப்படும். மற்றைச் செய்திகளைக் கூறுதல் ''வேறொன்று விரித்தல்'' என்னும் குற்றமாகுமே! இவ்வாறு தொடர்பில்லாதவற்றைக் காரணங்களாகப் புனைதல் இவரையன்றி வேறு யாராலும் இயலாது!

கா-22:- முன்நாள் இறைவன் அருள்நந்தி தனக்கியம்ப நந்தி கோதில் அருட் சனற் குமாரற்குக் கூறக் குவலயத்தின் அவ்வழி எங்குருநாதன் கொண்டு தீதகல எமக்களித்த ஞான நூலைத் தேர்ந்து என்ற சொற்றொடரை ஆராயுமிடத்து மெய்கண்டார் கொண்டது வழி என்றும் கொடுத்தது நூல் என்றும் தெளிவாகப் புலப்படும்.

விடை : ''என்ற சொற்றொடரை ஆராயும் இடத்து'' என்றவர் என்ன ஆராய்ந்தார் என விளங்காமலே காரணம் கூறியுள்ளார். இறைவன் நந்திக்கு இயம்பியது யாது? நந்திசனற்குமாரற்குக் கூறியது யாது? மெய் கண்டார் கொண்டது வழியாயின் முதல் நூல் யாது? மெய்கண்டார் கொடுத்தது இறைவன் இயம்பிய முறையேதானு? இறைவன் இயம்பியதும் நந்தி கூறியதும் மெய்கண்டார் கொடுத்ததும் ஒன்றேதானு? அல்லது மாறுபாடா? இறைவன் இயம்பியதையே மெய்கண்டார் கொடுத்தார் என்றால் மூல ஆசிரியர் இறைவனன்றே! இறைவன் தானே உண்மையில் மெய்கண்டான். எனவே மெய்கண்டான் என்பது

இறைவனைக் குறிக்காதா? மெய்கண்டான் நூல் என்பது இறைவன் நூல் எனப்பொருள்பட என்ன தடை?

இனி இறைவன் இயம்பியதையே மெய்கண்டார் கொடுத்தார் என்றால் மெய்கண்டார் கொடுத்தது இறைவன் இயம்பியதை மொழி பெயர்த்துக் கொடுத்தார் என்றுதானே முடியும். அங்ஙனமன்று இறைவன் தமிழிலே இயம்பினன் என்றால் ஆசிரியர் மெய்கண்டாரே என்று கூறுவதோ இறைவன் செய்த நூலை மெய்கண்டார் செய்த தமிழ்முதல்நூல் என்பதோ பொருந்துமா? காரணம் 8, காரணம் 10 இவைகளில் காரணமுடையார் கூறிய குற்றங்களெல்லாம் மெய்கண்டாரைச் சாருமே!

அந்தோ! பரிதாபம்! தமக்குப் பாதகமான ஒரு மேற்கோளை எடுத்துக்கூறி அதனையும் ஒரு காரணமாகக் காட்டுதல் எந்த நாட்டுத் தர்க்கமுறையோ! இஃதொன்றே இவர் விதண்டாவாத உலகாயதக் கொள்கையுடையவர் என்பதைப் பறைசாற்றும். எனவே இவர் தந்த மேற்கோளே மொழிபெயர்ப்பு என்பதை வலியுறுத்தும்.

கா-23 : மெய்கண்டார் வடமொழிச் சூத்திரங்களைப் பெற்றது உண்மையானால் அவ்வழி என்னாமல் அம்மொழி என்று கூறியிருப்பார்.

விடை : ''வடமொழிச் சூத்திரங்களைப் பெற்றது உண்மையானால்'' என்றவர், இறைவன் இயம்பியது யாது? மெய்கண்டார் கொண்டது யாது கொடுத்தது எதனை என்னுஞ் செய்திகளை ஆராய்ந்து காட்டியிருக்கலாமே? அவ்வாறு காட்டுவதற்கு ஒன்றும் இன்மையால் கூறாது விட்டார்! எனவே தமது பொய்யை நிறுவ முற்படுவது ஒன்றே இவரது குறிக்கோள் என்பது பெறப்படும்.

இன்னும் ''அம்மொழி'' என்பது வடமொழியையே அதன்மேல் வடமொழிச் சூத்திரத்தையோ, அதன்மேல் பன்னிரு சூத்திரங்களாலாகிய வடமொழிச் சிவஞான போதத்தையோ எவ்வாறு குறிக்கும்? அக்காலத்தும் பற்பல மொழிகள் வழக்கில் உள்ளனவே?

அம்மொழி என்றதாலேயே இவருக்கு வடமொழி நினைவிற்கு வருமாயின் ''இறைவன் இயம்ப'' என்றதும் வடமொழி இவரது நினைவிற்கு வரமறுப்பதற்குக் காரணம் என்னையோ!

அவ்வழி என்றது வழிநூலைக் குறிக்க, இறைவன் இயம்பியது என்றது வடமொழிச்சிவஞான போதத்தைக் குறிக்க, மொழிபெயர்ப்பு எனப்பொருளொடு முடிவதாய் அமைவதை உடன்படுவதில் இவருக்கு என்ன கஷ்டம்?!

அம்மொழி என்று சொல்லாதபடியால் உடன்படமாட்டேன் என்பது விதண்டையன்றோ! செய்யுளுள் உள்ள சொற்களை வைத்துப் பொருள் கொள்ளுவதன்றோ அறிவுடையோர் செயல். யாம்சொல்லிய படி அவர் செய்யுள் செய்யவில்லை; எனவே உடன்பட மாட்டேன் என்பது அறிவுடையோர் செயலாகுமா?

கா-24 : மேற்கூறிய பத்து (14-23) காரணங்களில் இருந்து ரௌரவ ஆகமத்திலுள்ள பன்னிரண்டு சூத்திரங்களும் அவைகளை மெய் கண்டார் மொழிபெயர்த்தார் என்ற வரலாறும் அருணந்தி சிவாசாரி யார் காலத்தில் இல்லவே இல்லை என்று துணிந்து கூறலாம்.

விடை : மேலே காட்டிய விளக்கங்களால் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் காலத்தில் மொழிபெயர்ப்பு என்ற கொள்கையே நிலவி வந்தது தெளிவாகும்.

மேலும் ''முதல் நூலே மொழிபெயர்ப்பல்ல'' என்னுங்கருத்து எப்பொழுது உண்டானது என்பது ஜெ.யெம். நல்லசுவாமிப்பிள்ளை யவர்கள் கூற்றுப்பற்றி முன்னர் காட்டப்பட்டது. எனவே அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் காலத்தில் ''முதல்நூல்'' என்றகருத்து இல்லவே இல்லை என்பதுதான் தெளிவு.

''மொழிபெயர்ப்பல்ல முதனூல்'' என்னும் தம் வாதத்திற்கு முன்னோர்கள் வாக்கிலிருந்து ஒரு மேற்கோள் கூட இவரால் காட்ட இயலவில்லையே. ''மொழிபெயர்ப்பு இல்லை'' என்னும் பொய்யை இவரால் தான் துணிந்து கூறமுடியும்.

கா-25:- இவ்வரலாறு அவர் காலத்தில் இருந்திருப்பின் இதைத் தழுவியேனும் அல்லது மறுத்தேனும் தெளிவாக ஒரு சொல்லேனும் அருளியிருப்பார்.

விடை:- 22வது காரணத்தில் இறைவன் நந்திக்குக் கூறியதையும் நந்தி சனற்குமாரற்குக் கூறியதையும் உடன்படுகின்றார். அதன்படி வழி நூல் செய்ததை அருணந்தி சிவாசாரிய சுவாமிகளும் கூறுகின்றார். அச்செய்தி இவ்வரலாற்றைத் தானே கூறுகின்றது. அவ்வழி என்ற ஒரு சொல்லே எல்லாவற்றையும் விளங்குவதாய் அமைகின்றதே.

இவருக்கோ இறைவன் இயம்பியது யாது, நந்தி கூறியது யாது, மெய்கண்டார் கொண்டது யாது என்பவைகளைப் பற்றிய உணர்வு இல்லை. ''மெய்கண்டார் கொண்டது வழி என்றும் கொடுத்தது நூல் என்றும்'' என்றவர், எதனைக் கொண்டார் எவ்வழிக் கொண்டார் என்ற வரலாற்றைத் தக்க ஆதாரத்துடன் கூருதவழி வேண்டுமென்றே மறுக்க முற்பட்டு ஒரு கட்டுக் கதையைக் கூறினர் என்றே முடியும்.

கா-30:- மேலே கூறிய செய்யுளில் சிவஞான போதத்தையும் சிவ ஞான சித்தியையும் ''விரும்பி நோக்கிக் கருத்தில் உறை திருவருளும் இறைவன் நூலும் கலந்து'' என்னும் இடத்தில் பொதுவாகச் சிவா கமங்களைக் கூறுகின்றாரே தவிர ரௌரவ ஆகமச் சூத்திரங்களைக் குறிக்கவேயில்லை. குறிக்காமல் விட்டதற்குத் தகுந்த காரணம் ஒன்றுமே இல்லை.

விடை:- மெய்கண்டான் நூல் என்ற அளவில் தமிழ்ச் சிவஞான போதம் காரணமுடையார் நினைவிற்கு வந்தது போல். ''இறைவன் நூல்'' என்ற அளவில் உமாபதி சிவாசாரிய சுவாமிகளுக்கு வட மொழிச் சிவாஞான போதம் நினைவிற்கு வந்தது. எனவேதான் வேறு கூறுது விடுத்தார். அருணந்தி சிவாசாரிய சுவாமிகளும் ''இறைவன் அருள் நந்தி தனக்கியம்ப'' என்றமையான் அந்நூலையே ''இறைவன் நூல்'' என உமாபதி சிவம் கூறினாராகலின் பொதுவாகச் சிவா கமங்கள்'' என்று காரணமுடையார் கூறுவது அறியாக் கூற்றாகும். அக்கருத்துப் பற்றியே ''இறைவன் நூல்கள்'' எனப் பன்மையாற் கூறுது விட்டார்.

அன்றியும் வேதம் ஆகமம் என்பன இறைவனால் செய்யப்பட்டன என்பது அருணந்தி சிவாசாரிய சுவாமிகளின் திருவாக்கு. எனவே காரணமுடையார் ''இறைவன்நூல்'' என்பதற்கு வேதாகமங்களைக் குறிக்கும் என்று கூறியிருக்க வேண்டும். எனவே அவ்வாறு கூறுது ''பொதுவாகச் சிவாகமங்களை'' என்று கூறுவது இவரது கனவில் உதித்த கற்பனையாகும்.

காரணம் 31 முதல் 42 வரை கூறப்பட்டவைகளில் யாரும் சிவ ஞானபோதத்தைக் குறிப்பிடவில்லை என்பதே. அவைகளில் குறிப் பிடப்பட்டவர்கள் யாரும் வடமொழிச் சிவஞானபோத ஆராய்ச்சியை மேற்கொள்ளாத காரணத்தால் கூறவில்லை. எனவே அவையெல்லாம் காரணமாகா.

கா-50 : மதுரைச் சிவப்பிரகாசர் முதன் முதலில் இவ்வரலாற்றை தொடங்குவதற்கு ஒரு விசேஷ காரணம் உண்டு. தமது உரையில் தாம் கூறுவதற்கெல்லாம் மேற்கோள் காட்டும் நல்ல பழக்கம் இவ ருக்கு மிக அதிகமாயிருந்தது. ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதல் நூலாகும்'' என்ற இலக்கண விதியை ஒட் டச்சிவாகமத்தை முதல் நூல் என்றார். மெய்கண்டார் அருளிய சிவ ஞானபோதத்தை வழிநூல் என்றார். இலக்கணவிதியே இவர்கால நிலைமையோடு கூடி இவ்வரலாற்றை இவர் தொடங்கும்படி செய்தது என்று கூறுதல் தவருகாது.

விடை : மதுரைச் சிவப்பிரகாசர் கூறுவது ஒருபுறம் இருக்கட்டும். அருணந்தி சிவாசாரிய சுவாமிகளே, ''அருமறை யாகமம் முதல்நூல் அனைத்து முரைக்கையினுல்'' என்று கூறியது இவரது கருத்துக்கு எட்டவில்லையே! இவ்வாறு ''வெளிப்படையாகக்'' கூறியதைக் கண்டிருந்தால் மதுரைச் சிவப்பிரகாசரைப் பற்றி எழுதக் கைவருமா? எனவே ''வினையினிங்கி'' என்ற மேற்கோள் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளின் கூற்றை வலியுறுத்தக் காட்டிய மேற்கோளாகும் என்பதை உணர்ந்து கொள்ள முடியவில்லை.

மேலும் காரணமுடையாருக்கு மேற்கோள் காட்டும் நல்லபழக்கம் சற்றும் கிடையாது. காரணம் அவர்தம் கொள்கைக்கு அனுசரணையாக ஒரு மேற்கோளும் இல்லாததேயாகும். உண்மையை உணர்த்தும் பொருட்டு ஆராய்ச்சியை மேற்கொள்ளுகின்றவர்கள்தான் மேற்கோள் காட்ட இயலும்.

கா-51 : சிவாக்ரயோகிகள் இவ்வரலாற்றில் சில விவரங்களைச் சேர்த்ததற்கும் விசேஷ காரணங்கள் உண்டு. மெய்கண்டாருடைய தமிழ் சூத்திரங்கள் நாட்டில் நன்ருகப் பரவிற்று . . . மெய்கண்டார் சூத்திரங்களுக்கு வடமொழியில் ஒரு பாஷ்யம் எழுதவேண்டும் என்ற விருப்பம் வடமொழி தமிழ்மொழிகளில் நல்ல புலமையுடைய சிவாக்ரயோகிகளுக்கு உண்டாயிற்று . . . நூல் முழுமையும் வடமொழியிலும் பன்னிரண்டு சூத்திரங்கள் மட்டும் தமிழில் இருந்தால் நன்ருயிராதென்று இயல்பாக எண்ணினுர் போலும். மூலக்கிரந்தம் பன்னிரண்டையும் மெய்கண்டார் தமிழிற் செய்தார் என்று மதுரைச் சிவப்பிரகாசர் கூறியது இவருக்குத் துணையாயிற்று. மூலக்கிரந்தம் ரௌரவ ஆகமத்திலுள்ளதென்றும் நந்தி தேவருக்கு ஸ்ரீகண்டருத்திரர் தந்ததென்றும் வரலாற்றைச் சிறிது பெருக்கினுர். இதற்குப் பொருத்தமாக நந்தி தேவர் வினுக்கள் ஐம்பத்தொன்று முதலியவற்றையும் கற்பித்தார்.

விடை : மெய்கண்டார் சூத்திரங்களுக்கு வடமொழியில் ஒரு பாஷ்யம் எழுதவேண்டும் என்பது முதலிய கதையை இவருக்குக் கூறியது யார்? வெளிப்படையாகக் கூருததை உடன்படுதல் அறிவுடைமையாகாது என்ற கொள்கை உடையவர் ஆயிற்றே! காரணமுடையார் தம் கொள்கைக்கு விரோதமாக ஆய்வை மேற்கொள்ளலாமா? கற்பனையாக ஒரு கதையை சிருஷ்டித்துக் கொள்ளலாமா? சிவாக்ரயோகிகள் மெய்கண்டார் சூத்திரங்களுக்கு வடமொழியில் ஒரு பாஷ்யம் எழுதவேண்டும் என்று கூருதபோதும் இவ்வாறு கூறுவது அப்பட்டமான பொய்தானே! தன் கொள்கையை நிறுவுவதற்கு இவ்வாறு துணிந்து பொய் கூறுவது அறிஞர் செயலாகுமா? இதுதானு உண்மையை நிலைநாட்டும் லட்சணம்!

மேலும் ''மெய்கண்டாருடைய தமிழ்ச் சூத்திரங்கள் நன்ருகப் பரவிற்று'' என்ருர். சிவஞானபோதம் பரம்பரையாக உபதேச முறையில் கூறப்பட்டு மிகவும் இரகசியமாகப் பாதுகாக்கப்பட்டு வந்ததை நல்லோர் அறிவர். அங்ஙனமாகவும் நன்ருகப் பரவிற்று என்பது உண்மையாகுமா? அவ்வாறு கூறுவது தம்நெஞ்சறிந்த பொய்யாய் முடியுமே.

கா-52 : மற்ற ஆகமங்களைக் கூருமல் ரௌரவ ஆகமத்தில் இச்சூத்திரங்கள் உள்ளன என்பதற்கும் ஒரு சிறு காரணம் உண்டு . . . தமது பன்னிரண்டு வடமொழி சூத்திரங்களுக்கும் இந்த ஆகமம் இடந்தரும் என்று இவர் கருதியிருக்கலாம்.

விடை : இவ்வாறு பன்னிரண்டு வடமொழிச் சூத்திரங்களைச் சிவாக்கிர யோகிகளே செய்தார் என்பது மிகக் கீழ்த்தரமான ஆபாசமான பொய். இந்த ஆபாசத்தைச் சகிக்கமுடியாமல் ஆங்கில முகவுரை எழுதியவரே மிகவும் நாசுக்காக மறுத்துள்ளார். It would be too much to father the authorship on him of the sutras believed on have been in Raurava Agama'' (ரௌரவ ஆகமத்திலுள்ளதாக நம்பப்படும் சூத்திரங்களின் ஆசிரியத்தன்மையைச் சிவாக்ர யோகிகளுக்குக் கொடுப்பது மிகவும் அதிகபட்சமாகும்.)

கா-54 : இவரே வடமொழி ''சூத்திரங்கள்'' என்று பெயர் கொடுத்தவர். இதன் காரணம் பெரிதும் ஆராய்ந்து சிந்திப்பதற்கு உரியது. வடமொழி வழக்கில் வசனத்துணுக்குகளுக்குத்தான் சூத்திரம் (bits of prose) என்ற பெயர் உண்டு. பௌஷ்கரம் மிருகேந்திரம் வடமொழிச் சிவஞானபோதம் முதலிய நூல்களிலுள்ள செய்யுள்களைச் சுலோகம் என்றும் இவைகளடங்கிய நூல்களைக் காரிகை என்றும் கூறுவதே வடநூல் வழக்காறு. சுலோகத்தைச் சூத்திரம் என்று சிவாக்ர யோகிகள் கூறியதன் காரணம் தமிழ்ச் சூத்திரத்தை வடமொழியில் மொழி பெயர்த்துத் தமிழில் சூத்திரம் என்று வழங்கிப் புகழ் பெற்றதை வடமொழியிலும் சூத்திரம் என்று சொல்லலாம் என்ற ஆசையே யாகும். இது கொண்டே தமிழிலிருந்தே இச்சூத்திரங்கள் வடமொழிக்குச் சென்றன என்று கூறலாம்.

விடை : காரணமுடையார் ''வடமொழி தமிழ்மொழிகளில் நல்ல புலமையுடைய சிவாக்ர யோகிகள்'' என்ருர். அவ்வாறு புலமையுடையவரா வடநூல் வழக்காறு அறியாமல் இருந்தார்? அடாடா! காரணமுடையார்தாம் வடநூல் வழக்காறுகளை எத்துணை அளவு வரையறை செய்து வைத்துள்ளார்!

''சதரத்ன ஸங்க்ரஹம்'' (தமிழ்ப்பெயர்ப்பு) என்னும் நூலின் முகவுரையுள் ''சுருக்கமாகவும் அனுவாதமில்லாமலும் சாரப்பொருளை

விளக்குவதால் ஆகம சுலோகங்கள் சூத்திரங்கள் என்று வழங்கப் படுகின்றன''. (அத்ரஸாரார்த்த அபிதாயினும் அசந்திக்தார்த்த போதகானும் அர்த்தவாத அநுரூப விஸ்தரஹீநாம் ஆகம சுலோகா நாம் சூத்ரபதனே வியவஹார :) என்ற மேற்கோள் காட்டப் பட்டுள்ளதே!

மேலும் அந்நூலுள்ளேயே மிருகேந்திரத்திலிருந்து. ''விதை போல மூல சூத்திரம் உள்ளது; அஃதாவது விதையில் மரம் தோன்றுவது போல எந்தச் சூத்திரத்தில் எல்லா ஆகமப்பொருளும் விளங்குகின்றதோ அதுவே மூலசூத்திரமாகும்; அது மங்களமான அத சிவ சப்தங்களால் அணி செய்யப்பெற்று விளங்குகிறது'' (யத்ர பீஜமிவாருதோ மஹா தந்த்ரார்த்த பாதப : | ஆபாதி மூலசூத்ரம் தத ஸப்தாலங்க்ருதம் ||) என்ற ஆகம மேற்கோளும் காட்டப் பட்டுள்ளதே. எனவே ஆகம சுலோகங்களெல்லாம் சூத்திரங்கள் என வழங்கப்படும் என்பதும், அவற்றுள் மூல சூத்திரம் இவை என்பதும் விளக்கமாகப் பெறப்படுகின்றன.

இதனுல் காரணமுடையார் ''வட நூல் வழக்காறு'' சற்றும் அறியாதவர் என்பது தெளிவாகும். சைவ மரபு அறியாத ஒருவர் ஏதோ கூறியதை உண்மையென நம்பி அதனை அறிவுடையோரிடம் விசாரியாது மூக்கறையன் வார்த்தையை நம்பி மூக்கறுத்துக் கொண்டதுபோல் நிகழ்ந்து விட்டது. இவரது கூற்று என்பது வெளி யாகின்றது.

கா-57 :- சிவாக்ர யோகிகள் இப்படி வரலாற்றைப் புனைந்தது நல்ல எண்ணத்தோடேதான் என்பதில் ஐயமில்லை. மெய்கண்டார் சூத்திரக் கருத்துக்கள் பரவ வேண்டும் என்ற பொது நோக்கம் அவருக்கிருந் தது போற்றற்குரியதே. அவர் காலத்திய நிலைக்கேற்ப புரைதீர்ந்த நன்மை பயந்தமையால் பொய்மையும் வாய்மையிடத்ததாயிற்று.

விடை : என்னே அகண்ட ஆராய்ச்சி! காரணம் 51ல் மெய்கண்டாரு டைய தமிழ்ச்சூத்திரங்கள் நாட்டில் நன்ருகப் பரவிற்று'' என்ருர். இங்கேயோ, ''மெய்கண்டார் சூத்திரக் கருத்துக்கள் பரவவேண்டும் என்ற பொது நோக்கம்'' என்ருர். அடாடா! என்னே கருத்தாழம்! தமிழ்ச்சூத்திரக் கருத்துக்களைப் பரப்ப வடமொழியில் வியாக்கியானம்! அக்காலத்தில் தமிழ்நாட்டில் இருந்தவர்களுக்கு வடமொழியில் படித்தால்தான் தமிழ் விளங்கும் போலும்! நன்று! நன்று!

என்ருலும் ''வாய்மையிடத்தாயிற்று'' என்று போற்றினர்! இவரது கொள்கை இதுவாகலின் பொய்மையை மேற்கொண்டார் போலும். எனவே ''தன் நெஞ்சறிவது பொய்யற்க'' என்ற ஆணையை மறந்தார்!

கா-60 :. உமாபதி சிவம் எழுதியதாகவே வைத்துக்கொண்டாலும் ... ஸ்ரீமந் ரௌரவே என்று கூருமல் ''சிவஜ்ஞானபோதே'' என்பதால் சிவஞான போதம் என்பது ஒரு தனிநூல் என்றே ஏற்படும். பன்னிரண்டு சூத்திரங்களை மட்டும் ஒரு தனிநூல் போல ஏன் கூறவேண்டும்? மேலும் விரிப்பில் இது மிகமிகப் பெருகும்.

விடை :- பாரதத்தின் ஒரு பகுதியான 'பகவத்கீதை' ஒரு தனிநூல் என்று வழங்கவில்லையா? சிவகீதை ரிபுகீதை முதலியன எல்லாம் தனிநூலாக வழங்குகின்றனவே. வடமொழி ஸ்காந்தத்தில் ஒரு பகுதி தானே கந்தபுராணம் என்று மொழிபெயர்க்கப்பட்டு விளங்குகின்றது. இவ்வாறு பகுதிகள் தனிநூலாக வழங்குவது கண்கூடாக அறியப் படுவதுதானே! எனவே பன்னிரு சூத்திரம் ஒரு தனி நூலாக வழங்குவதில் என்ன மர்மத்தைக் கண்டுவிட்டார்!

கா-61ன் முன்னுரை : இனி மேலே 12, 13ஆம் காரணங்களை ஒட்டி ஒவ்வொரு வடமொழி சூத்திரத்தையும் அதற்கு மெய்கண்டார்மீது சுமத்தப்படும் மொழி பெயர்ப்பையும் ஆராய்வோம் ... இம்முறை மேல்நாட்டுத் தருக்க நூலில் Reductio ad absurdum என்று கூறப் படும். ஒவ்வொரு சூத்திரமாக ஆராயலாம்.

விடை :- இவர் இதுகாறுங் கூறியவை 'absurd' ஆக முடிந்ததைப் பார்த்தோம். ''ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்'' என்பர் பெரியோர். எனவே பின்னர்க் கூறப்படுங் காரணங்களும் இவ்வாறே முடியும் என்பது தேற்றம். எனவே ஒவ்வொரு சூத்திரமாகக் காண் போம்.

கா-61 : முதல் சூத்திரம் ''ஸ்திரி புந்நபும்ஸகாதித்வாஜ் ஜகத : கார்ய தர்சனுத், அஸ்தி கர்த்தா ஸஹ்ருத் வைததஸ் ருஜத்யஸ்மாத் ப்ரபுர் ஹர : என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு, ''பெண் ஆண் அலி ஆதியாயிருத்லின் காரியமாகக் காணப்படுதலின் ஜகத்திற்குக் கர்த்தா உண்டு, அந்தக் கர்த்தா இதனைச் சங்கரித்து சிருஷ்டிக்கிருன், ஆகையால் ஹரன் பிரபு'' என்பது மெய்கண்டார் சூத்திரம், ''அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம், அந்தம் ஆதி என்மனுர் புலவர்'' என்பது. இனி ஒவ்வொரு சொல்லாக எடுத்துப் பார்ப்போம். பெண் என்று தொடங்காமல் ''அவன்'' என்று மெய்கண்டார் ஏன் தொடங்கினுர்? முதற்கோணல் முற்றுங்கோணல் என்பதை நன்கறிந்த சந்தான முதற்குரவர் ஆகம வாக்கிலுள்ள முறையை விளையாட்டாக மாற்று வாரா? அவள் அவன் அது எனும் அவை'' என்று தொடங்குவதில் என்ன கஷ்டமுள்ளது?

விடை : மற்றவர்களுக்கெல்லாம் தெரியாதாகையால் இவர் நேர் மொழிபெயர்ப்புக் கொடுத்தார். அவ்வாறு நேர் மொழிபெயர்ப்புச் செய்தவர் பல சொற்களை அவ்வாறே எழுதி விட்டார். இதுதான் நேர் மொழிபெயர்ப்பின் லட்சணம் போலும்! சூத்திரத்தில் ஆதி என்றிருப்பதை ''ஆதியாயிருத்தலின்'' என்று மொழி பெயர்த்தார்! இவ்வாறே காரியம், ஜகத், கர்த்தா, ஹரன், பிரபு என்ற சொற்களை மொழிபெயர்க்காமல் அப்படியே எழுதிவிட்டார். பொருள் விளங்க வில்லை போலும்! இவருக்கு முன்னோடியாய் இருந்தவர்கள் இச் சொற்களின் பொருளை இவருக்குத் தெரிவிக்க மறந்ததால் வந்த விளைவு. இவ்வாறு முதற் சூத்திரத்தையே முறையோடு மொழி பெயர்க்க இயலாதவர் சந்தான முதற்குரவர்க்கு ''முதற்கோணல் முற்றுங்கோணல்'' என்று அறிவுரை மட்டும் வழங்கிவிட்டார்! எளிமை யான செயலெனப் பிடித்துக்கொண்டார் போலும் !

''பெண் என்று தொடங்காமல் அவன் என்று மெய்கண்டார் ஏன் தொடங்கினர்'' என்றார். கா-54ன் விடையில் இவர் வடமொழி மரபு, சைவ மரபு முதலியவைகளை அறியார் என்பதைப் பார்த்தோம். ஈண்டுத் தமிழ் மரபும் அறியார் என்பதை நிரூபிக்கின்றார். ''அவன் அவள் அது'' என்னும் முறை தொல்காப்பியத்தில் ஆளப்பட்டுள்ளது. எனவே மொழிபெயர்க்கும்போது தமிழ் மரபையும் கொள்ள வேண்டு மாகலின் தமிழ் மரபிற்கேற்ப மொழிபெயர்த்தார். எனவே விளையாட் டாக மாற்றவில்லை என்பது தெளிவாகும். (காரணமுடையார்க்குத் தன்னைத் தவிரச் சந்தான குரவர்கள் மதுரைச் சிவப்பிரகாசர், சிவாக்ரயோகிகள் முதலியவர்கள் எல்லோருமே பொய்யர்கள் என்று கூறுவது விளையாட்டாக இருக்கலாம்.)

''அவள் அவன் அது எனும் அவை என்று தொடங்குவதில் என்ன கஷ்டமுள்ளது'' என்றார். செந்தமிழ் மரபையும் அறிந்து போற்றியதுதான் ''கஷ்டம்''. இவரைப்போன்று இவைகளை உதிர்த்து விட்டால் கஷ்டம் இராது. எனவே ''கஷ்டம் எங்குள்ளது என்பது விளங்கும்!

கா-62 : ''ஆதியாயிருத்தலின்'' என்பதை ஏன் விட்டு விட்டார்?

விடை : மொழி பெயர்க்காமல் விடுபட்டது என்பதைத்தான் விட்டு விட்டார் என்று குறிப்பிடுகின்றார் போலும். ஆதி என்பதன் பொருளை இவர் உணராத காரணத்தால் அவர் விட்டுவிட்டார் என்று எழுதி விட்டார்! ஆதி என்பதன் பொருள் பாடியத்துள் கொடுக்கப்பட்டுள் ளது. அது, ''எனும் என்பது இடைச் சொல்லடியாகப் பிறந்த பெய ரெச்சமாய் இவ்வாறு என்னும் பொருள் குறித்து நின்றது. வட மொழிச் சூத்திரத்தில் ஆதி என்றதும் அப்பொருட்டு'' என்னும் பகுதி

யாகும். இதன் மேலும் அவர்தம் கருத்துப் பரம்பரையினர்க்கு விளக்கம் வேண்டுவதில்லை எனக் கருதலாம்.

கா-63 : இருத்தலின் காணப்படுதலின் என்று இரண்டு காரணங்களைக் கூருமல் மூவினைமையின் என்று ஏன் கூறினர்?

விடை : ஆதியாயிருத்தலின் என்ற காரணத்தால் காரியமாகக் காணப்படுதல் பெறப்படுகின்றது. காணப்படுதலை நிறுவுங்காரணம் இருத்தலின் என்பது. இரு காரணங்கள் இல்லை. காரண காரியம் என்பதை அறியாது இரண்டு காரணங்கள் எனக் குளறினர்.

கா-64 : பெண் ஆண் அலி என்று பொதுவாக உள்ளதை அவன் அவள் அது என்று ஏன் சுட்டுப் பொருளாகக் கூறினர் ?

விடை : சிருர்களும் விளங்கிக்கொள்ளக் கூடிய விடை பெண் ஆண் அலி என்பன எல்லாம் சுட்டப்படும் பொருளாக இருப்பதால் சுட்டுப் பொருளாகக் கூறினர் என்பதாகும். இதற்கு மேல் கூறப்படுவன இவர் விளங்கிக்கொள்ள மாட்டோம் என்று புறக்கணித்த பகுதியாகும்.

பாடியத்துள், ''அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு சுட்டியறியப் படுவன வெல்லாந் தோன்றி நின்று அழியும் என்பதே சித்தாந்த முடிபெனக் கொள்க. இது விளங்குதற் பொருட்டன்றே ஆண் பெண் அலி என்ருதல் ஒருவன் ஒருத்தி ஒன்று என்ருதல் ஓதாது அவனவளது எனச் சுட்டுப் பெயர்களான் ஓதியதூஉ மென்க. இதற்கிதுவே பொருளாதல் உணர்த்துதற்கென்றே ஒருவனொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென உரைசெய்து எடுத்துக் கொண்டதூஉ மென்க'' (சூ:1 அதி:1) என்னும் பகுதியாகும். இஃதும் ஆதி என்னும் சொற்குறிப்பால் பெறப்பட்டதேயாகும்.

காரணமுடையார் மேல்நாட்டுத் தருக்கநூல் முறையைக் கொண்டதாகக் கூறினர். மேலை நாட்டவர் தாம் பெற்ற பொருளை எவ்விடத்திலிருந்து பெற்ரேம் என்பதை வெளிப்படையாகக் கூறுவர். ஆனல் இவரோ இக்காரணத்தைப் பாடியத்திலிருந்து எடுத்துக் கொண்டதைக் கூறவில்லை. ''வடமொழி தமிழ் மொழிகளில் நல்ல புலமையுடைய'' காரணமுடையார் என்று காட்டிக்கொள்ள விரும்பினர் போலும். மேலும் பாடியச் பகுதியைக் காட்டினல் அதன்மேல் தக்க காரணத்தைக் காட்டி மறுக்க வேண்டுமே என்னுங் கருத்தால் விட்டு விட்டார் போலும் ! பிறர் பொருளைத் தன் பொருள்போல் காட்டுவதால் பெறும் பயன் யாதோ ?

கா-65 : காரியமாக என்று பொதுவாக உள்ளதை மூவினைமையின் என்று ஏன் சிறப்பித்துக் கூறினர்? முத்தொழில் ஐந்தொழில் என்றெல்லாம் வகுக்கக்கூடிய காரியமாக என்பதை ஏன் இப்படி மாற்றினர்?

விடை : முதற்சூத்திரத்தில் கூறப்படும் அவன் அவள் அது என்பன உலகங்களைக் குறிக்கும் என்பது ''தோற்றிய திதி'' என்பதாலும், ''சுட்டப்பட்ட பிரபஞ்சம்'' என்ற மேற்கோளாலும் நன்கு விளங்கும். எனவே அச்சொற்கள் சடப்பிரபஞ்சத்தைக் குறித்து வருவன என்பதைச் சித்தாந்தம் கற்கும் சிறுர்களும் அறிவார்கள். தோன்றி நின்று அழிதல் என்னும் முத்தொழில்களும் சடத்தைப் பற்றியே நிற்பன. மறைப்பும் அருளும் ஆன்மாவைப்பற்றி நிகழ்வன. ஐந்தொழிலுக்கும் கர்த்தா சிவபெருமானே. எனவே காரியம் என்பது சுட்டப்படுகின்ற சடப்பொருள் நிலையை விளக்குவதால் காரியம் என்பது மூவினைமை என மொழிபெயர்க்கப்பட்டது. சிறப்புப் பொருளல்ல. எனவே காரியம் என்பது முத்தொழில் ஐந்தொழில் என்றெல்லாம் வகுக்கப்படக் கூடிய பொருளைத்தர இயலாது என்பது நிச்சயம், சொற்பொருள் உணராது காரணத்தைக் காட்டிவிட்டார்.

கா-66 : மூலத்தில் இல்லாத மலத்துளதாம் என்பதை ஏன் சேர்த்தார்?

விடை : இதுவும் பாடியத்துள் காட்டப்பட்டது தானே. ''அற்றேல் வடமொழிச் சூத்திரத்தில் மலத்தால் என்பது இல்லையாலோ வெனின், அற்றன்று. நாலாம் பாதத்தில் இதனுல் என்பது மலத்தால் என்னும் பொருட்டு, ஆண்டுச் சிருட்டிப்பன் இதனுல் என்புதனை இதனுற் சிருட்டிப்பன் என மாறிப் பொருளுரைக்க. அற்றேல் சுட்டுப்பெயர் முன் வந்ததனைச் சுட்டுவதே யாகலின் அங்ஙனம் வாராத மலத்தைச் சுட்டுமாறு என்னையெனின், அற்றன்று. சுட்டுப்பெயர் முன்வந்ததனையே சுட்டுமென்னும் நியமம் செய்யுளுக்கு இன்மையானும் சூசிப்பது சூத்திரமாகலானும் நான்காஞ் சூத்திரத்து வருவதனை ஈண்டுச்சுட்டுப் பெயராற் சூசிப்பித்தார் எனக்கொள்க. இஃதுணராதார் ஆண்டு இதனுல் என்பதற்கு இங்ஙனமாகலின் எனப்பொருளுரைப்ப. அது கூறுமையே பெறப்படுமென்றொழிக. அற்றுகலினன்றே ஆசிரியர் இங்ஙனமாகலின் அந்தமாதி என்ருேதாது வாளா கூறியொழிந்ததூஉ மென்க'' (சூ1:அதி3) என்னும் பகுதியாகும்.

இதனுல் காரணம் எங்கிருந்து எவ்வாறு எடுக்கப்பட்டு ஒழிந்தது என்பது விளங்கும்.

கா-67 : இவ்வாறு சேர்ப்பதால் மலத்துளதாம் என்ற கொள்கையை ஒப்புக்கொள்ளாத பல வாதிகளுக்கு இடமில்லை என்பதை அறிந்தா அறியாமலா வேண்டுமென்று இதைச்சேர்த்தார்.

விடை :- சேர்க்கப்படவில்லை என்பது மேலே நாட்டப்பட்டது. ஆசிரியர் தமதாசிரியராகிய பரஞ்சோதி முனிகள் அருளியவாறே செய்தார். எனவே ''அறியாமலா வேண்டுமென்று'' என்பது அறியாக் கூற்றாகும். ''அதனால்'' என்பதன் பொருளுணராத காரணத்தால் பலவாதிகள் பலவாறு குளறினர். காரணமுடையாரும் ஆகையால் எனக் குளறிப் பலவாதிகளோடு சேர்ந்தார். எனவே இவ்வாறு சொற்பொருளை உபதேசவாயிலாக உணர்தல் வேண்டும். அது பற்றியே நந்தியெம் பெருமான் வினவ ஸ்ரீ கண்ட பரமேசுவரர் விடுத்தார். உபதேச முறையின் உண்மையை உணர்ந்த காரணத்தால் மெய்கண்ட தேவநாயனார் ''மலத்தால்'' என அறிந்தே மொழி பெயர்த்தார். எனவே ''பலவாதிகளுக்கு இடமில்லை என்பதை அறிந்தா'' என்பது அறியாக் கூற்றாகும். இவர் சைவரல்லாத காரணத்தால் பலவாதிகளுக்கு வக்காலாத்து வாங்குகின்றார் போலும்!

கா-68 : இப்பேற்பட்ட மிகமுக்கியமானதொரு கொள்கையை மொழி பெயர்ப்பென்ற சாக்குக் காட்டி ஆகமவாக்கியத்திற் சேர்க்கலாமா?

விடை : ஆகமத்தில் இல்லாததைச் சேர்க்கவில்லை என்பது மேலே காட்டப்பட்டது. இல்லாததை உள்ளதுபோல் கூறுதல் காரணமுடையாருக்கே உரிய தனிச்சிறப்பு. ''பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே'' என்கிற நியாயம் அவரது உயிர்க்கொள்கை.

கா-69 : சங்கரித்து சிருஷ்டிக்கின்றான் என்ற தொடரில் இரண்டு செயல்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கூறப்பட்டிருக்கினவே தவிர சங்கார காரணம் என்பதனால் அவனே சிருஷ்டிக்கின்றான் என்ற காரண காரியமுறை இல்லாதிருப்பவும் அம்முறை தோன்ற அந்தம் ஆதி என்று ஏன் கூறினர்.

விடை : இவரது கூற்றிலிருந்து ''சங்கரித்துச் சிருட்டிக்கின்றான்'' என்ற மூலத்தை மெய்கண்ட தேவநாயனார் ''அந்தம் ஆதி'' என்று மொழிபெயர்த்ததாகக் கருதுகின்றார் என்பது அறியப்படும்.

''சங்கரித்துச் சிருட்டிக்கின்றான்'' என்பதற்கு வடமொழி மூலம், ''ஹ்ருத்வாஸ்ருஜதி'' என்பதாகும். அதனை மெய்கண்டதேவ நாயனார், ''ஒடுங்கி உளதாம்'' என மொழிபெயர்த்துள்ளார். காரண முடையார் கருதுவதுபோல் ''அந்தம் ஆதி'' என்பது இல்லை. எந்த மூலத்திற்கு எது மொழிபெயர்ப்பு என்பதை அறியாது எழுதினார்! அதுவும் அவர் பிழையன்று. அவருக்கு அறிவுறுத்தியவர் தவறுதலாகக் கூறியதால் வந்த வினையேயாகும்! அறிவுறுத்தியவர் சரியாகக் கூறியிருந்தால் இவரும் சரியாகக் கூறியிருப்பார்!

இவ்வாறு மூலமும், மொழிபெயர்ப்பும் அறியாதவர் மேல்நாட்டு "Reductio ad absurdum" என்ற முறையில் ஆய்வை மேற்கொண்டது சாலப் பொருத்தமே !

கா-70 : ஹரன் பிரபு என்று சைவர்கட்கு மிக உகப்பைத் தரக் கூடிய சொற்களை விட்டு விடுவது மிகு சைவநாதராகிய மெய்கண்டாருக்கு அடுக்குமா ? என்மஞர் புலவர் என்று சேர்த்தது பற்றி மேலே 7-10 எண்ணுள்ள நான்கு காரணங்களைப் பார்க்கவும். சிவஞான பாடியம் முதலிய நூல்களில் மெய்கண்டார் சூத்திரங்கட்குக் கூறப் படும் பல நுட்பமான கருத்துக்களெல்லாம் வடமொழி சூத்திரங்களில் அமையவில்லை என்று ஆராய்ந்து பலநூறு காரணங்கள் காட்டலாம். இச்சிறு கட்டுரை அளவுகடந்து விரியும் என்று அஞ்சி இச்சூத்திரம் பற்றிய ஆராய்ச்சியை இம்மட்டில் நிறுத்தி மேல்வரும் சூத்திரங்களைப் பற்றியும் சுருக்கமாகவே ஆராய்வோம். அறிஞர்கள் நுண்ணறிவால் பெருக்கிக் கொள்வர்.

விடை : ஹரன், பிரபு என்ற சொற்கள் ஸகஸ்ர நாமாவளியில் பிரயோகிக்கப்பட்டுள்ளன. ஹரன் என்ற சொல் மூன்றிடங்களிலும் (18, 106, 753), பிரபு என்ற சொல் இரண்டிடங்களிலும் (3, 21) ஆளப்பெற்றுள்ளன.

ஹரன் என்பது (1) பிரளய காலத்தில் அனைத்துலகையும் ஸம்ஹாரம் செய்பவர் என்றும் (2) தம் குணங்களினால் மனதைக் கவர்பவர் என்றும் (3) துக்கத்தைப் போக்குபவர் என்றும் பொருள் படுவதும், பிரபு என்பது (1) உலக நாயகர் என்றும் (2) அனைத் தையும் அனுபவிப்பவர் என்றும் பொருள்படுவதும் ஸகஸ்ரநாம பாஷ்யத்துள் காட்டப்பட்டுள்ளன. எனவே அச்சொற்கள் நாநார்த்த பதங்கள் என்பது விளங்கும். இவர் சைவரல்லாத காரணத்தால் பார்க்கவில்லை போலும் ! அகராதியைப் பார்த்திருந்தாலும் இவ் வுண்மை தெளிவாகி இருக்கும். ஆனால் அவர் தம்மையே ஓர் அகராதியாகக் கருதினபடியால் பார்க்க விரும்பவில்லை ! மேலும் உண்மையை உணர்த்த வேண்டும் என்ற பொறுப்பும் அவருக்கில்லை !

ஆனால் மெய்கண்டதேவ நாயனாருக்கோ மொழி பெயர்ப்பாளர் என்ற முறையில் அச்சொற்கள் என்ன பொருள்களில் வடமொழிச் சூத்திரங்களில் கையாளப்பட்டுள்ளன என்பதை அறிந்து அறிவிக்க வேண்டிய பொறுப்புடையவர். எனவே அவற்றின் பொருள்களை அந்தம், ஆதி என மொழிபெயர்த்தார்.

காரணமுடையாருக்குப் பொருட்போதம் இன்மையால் ஹரன் பிரபு என்றே எழுதினர். ஹரன் பிரபு முதலிய சொற்களை அவ்

வாறே எழுதுவது நேர்மொழி பெயர்ப்பு என்பது அவர் கொள்கை போலும்!

இனிச் ''சிவஞான பாடியம் முதலிய நூல்களில் மெய்கண்டார் சூத்திரங்கட்குக் கூறப்படும் பல நுட்பமான கருத்துக்கள் வடமொழிச் சூத்திரங்களில் அமையவில்லை'' என்று கூசாது பொய் கூறினர். ''பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினல் மெய்போலும்மே மெய் போலும்மே'' என்பது அவரது குறிக்கோள் ஆயிற்றே!

பாடியகாரர் இருவகைச் சூத்திரங்களுக்குமே விளக்கந்தந்தார் என்பது காரணம் 90ன் விடையில் விளக்கப்படும். மேலும் பாடியத் துள் இவர் கூறும் பல காரணங்களுக்கு விடைதரப் பட்டுள்ளன. ஆயினும் அவ்வாறுள்ள பகுதிகளைக் கண்டதும் கண்களை இறுகமூடிக் கொள்கின்றார்! இது தான் இவரது மேல்நாட்டு ஆய்வுமுறைக் கொள்கை போலும்!

பல நூறு காரணங்கள் காட்டலாம் என்றார். "Reductio ad absurdum" என்பதற்கு இலக்கியமாக இவரது 120 காரணங்களே சாலும். மேலும் வேண்டா!

கா-71:- இரண்டாம் சூத்திரம், ''அந்யஸ்ஸந் வ்யாப்திதோ நந்ய: கர்த்தா கர்மாநு ஸாரத: கரோதி ஸம்ஸ்ருதிம் பும்ஸாம் ஆஜ்ஞயா ஸமவேதயா'' என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு ''வ்யாப்தியா யிருத்தலால் அநந்யனை கர்த்தா அந்யமாயிருந்து கொண்டு சம வேதமாயுள்ள ஆஞ்ஞையால் புருஷர்களுக்கு கர்மத்தை யனுசரித்து புனருற்பவத்தைச் செய்கிறன்'' என்பது. மெய்கண்டார் சூத்திரம், ''அவையே தானேயாய் இருவினையின், போக்கு வரவு புரிய ஆணை யின், நீக்கமின்றி நிற்குமன்றே'' என்பது ''வியாப்தியாயிருத்தால்'' என்ற காரணம் சைவாசித்தாந்தத்திற்கு முற்றிலும் விரோதம், கடவுளை வியாபகமாகவும் உயிர்களை வியாப்பியமாகவும் மலத்தை வியாப்தியாகவும் கொள்வதே சைவ சித்தாந்தம். கடவுள் வியாப்தி என்ற கொள்கை கடவுளுக்கு (முதற் காரணம் என்ற) உபாதான காரணம் கூறும் சமயிகளுக்குப் பயன் படுவது. மெய்கண்டார் அருணந்தி சிவாசாரியார் உமாபதி சிவாசாரியார் சிவஞான சுவாமி கள் முதலிய சைவ சித்தாந்திகள் இதை ஒப்புக் கொள்வதில்லை. ஆனல் சிவாக்ர யோகிகள் யாழ்ப்பாணம் ஞானப் பிரகாசத்தம்பிரான் முதலியோர் கடவுளுக்கு உபாதான காரணத்தையும் நிமித்த காரணத் தையும் சேர்த்துக் கூறுவர். இந்த நுட்பம் ஒன்றிலிருந்தே சிவாக்ர யோகிகள் வடமொழி சூத்திரங்களைச் செய்திருத்தல் கூடும் என்று எண்ணுவதற்கு ஒரு தனியான தூண்டுதல் ஏற்படும். பௌஷ்கர பாஷ்யத்தை ஞானப்பிரகாசர் இயற்றினர் என்பதற்கு ஆதரவு

தானே போதரும். மெய் கண்டார் இக்கொள்கையுடைய வடமொழி சூத்திரத்தைக் கனவிலும் கண்டறியார்.

விடை:- காரணமுடையார் தம் கொள்கைக்கேற்ப வியாப்தி அநந்யன் கர்த்தா, அந்யம், சமவேதம், ஆஞ்ஞை, புருஷர், கர்மம் முதலிய சொற்களை நேர்மொழி பெயர்ப்பாகத் தந்தார் அவைகளை மொழி பெயர்த்துப் பொருளைக் காட்டினல் குதர்க்க வாதத்திற்கு இடமில்லாது போய் விடும் என்ற கவலை போலும்!

வியாப்தி என்ற சொல்லின் பொருள்தான் யாது? சமய நூல்களை முறையோடு கற்கும் சிரூரும் அதிவியாப்தி அவ்வியாப்தி என்ற சொற் பிரயோகங் கொண்டு அறிவார்கள். அச்சொற்கள் முறையே அதிகமான வியாபகம், குறைவான வியாபகம் பற்றிப் (பிரயோகிக்கப்படுகின்ற சொற்கள். எனவே வியாப்தி என்பது சம வியாபகம் என்றபெருளில் வருவது பெறப்படும். சமவியாபகம் என்னுமிடத்து உள்ளீடாய்க் கலந்து நிற்றல் அறியப்படும். அதுபற்றி இறைவனது சர்வாந்தரியாமித்துவம் நிருவப்படும். (சர்வ+அந்தரியாமி+த்வம்)

பாடியகாரரும் சிவசமவாத உரை மறுப்புள் ''மொய்தரு பூதமாதி'' என்னுஞ்செய்யுள் விளக்கத்துள், ''இனியொருங்கு பிரேரிப்பனெனின் அன்னியதாவனுபபத்தி யர்த்தாபத்தியினுனே ஔபச்சிலேடிக வியாத்தி உண்டெனப்பட்டு, சர்வாந்தரியாமித்துவம் என்னும் ஔபச்சிலேடிக வியாபகத்துவம் சிவனுக்குத் தானே சித்தித்தது; எதுபோலவெனின் ஞாயிற்றின் சன்னிதியிற் பங்கசாதிகள் எல்லாம் ஒருங்கு தொழிற்படுதல் அதன் கிரண பரிச சம்பந்தம் ஒருங்கியைந்தல்லது செல்லாதவாறு போல என்றுணர்க. இங்ஙனம் ஆகமப்பிரமாணத்துக் கனுகூலமாம் அர்த்தாபத்திப் பிரமாணத்தானும் சிவனுக்குச் சர்வபதார்த்தங்களினும் ஔபச்சிலேடிக வியாத்தி சித்தித்தலின் அது பின்னர்ச் சிலபதார்த்தங்களின் இன்ருமாறு சுருக்கி ஒதுக்கி வர்ச்சிக்கற் பாலதன்று'' என்று தெளிவாகக் கூறியுள்ளார்கள். எனவேதான் ஆசிரியர் ''அவையேதானேயாய்'' என்றுமொழி பெயர்த்தார்.

இவ்வாறு சைவசித்தாந்த நூற்களைப்பாராத காரணத்தால் ''மெய்கண்டார்........... முதலிய சைவ சித்தாந்திகள் இதை ஒப்புக் கொள்வதில்லை'' என்று தமது அறியாமையை வெளிப்படுத்தினர். காரணமுடையாரின் கருத்துப் பரம்பரையினராவது ''வியாப்தியாயிருத்தலால் என்ற காரணம் சைவ சித்தாந்தத்திற்கு முற்றிலும் விரோதம்'' என்ற கொள்கையை விடுவார்களாக!

மேலும் ''கடவுள் வியாப்தி'' என்று வடமொழிச் சூத்திரத்தில் கூறப்படவில்லை. இவரது நேர்மொழி பெயர்ப்பிலும் அவ்வாறு கூறப் படவில்லை. பின் எங்கிருந்து இக்கொள்கையைக் கண்டுபிடித்தார்? ''திரித்துக்கூறி நம்பிக்கையை வேண்டுமென்றே குலைக்கும் குற்றமும்'' என்ற அவரது திருவாக்கிற்கு அவரே இலக்கியமாய்த் திகழ்கின்றார்.

எனவே ''இந்த நுட்பம் ஒன்றிலிருந்தே சிவாக்ர யோகிகள் வட மொழி சூத்திரங்களைச் செய்திருத்தல் கூடும்'' என்று காரணமுடை யார் எழுதியது கலப்படமில்லாத பொய் என்பது வெளியாகும். அது பற்றி, ''பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால் மெய்போலும் மே'' என்பது அவரது குறிக்கோள் என்பது நிறுவப்படும்.

கா-72 : பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய், அதாவது இன்மை அன்மை மறுதலைகளுள் அன்மைப் பொருள் கொள்ளும் சுத்தாத்வைத சைவ சித்தாந்தம் ''வியாப்தியாயிருத்தலின் அநந்யன்'' என்ற சூத்திரத்தை மறுக்க வேண்டியது அவசியமாகை யால் இச்சூத்திரத்தோடு சேர்ந்துவரும் ஏனைய பதினொரு சூத்திரங் களையும் இறைவாக்காக எங்ஙனம் துணிந்து ஒப்புக்கொள்ளமுடியும்?

விடை : வியாப்தியாயிருத்தலின் என்பது சர்வாந்தரியாம் தன்மையை நிறுவிச் சைவ சித்தாந்தத்திற்கு உடன்பாடே என்பது மேலே காட்டப்பட்டது. எனவே இக்காரணமும் பொய்யே என்பது துணியப் படும்.

மேலும் சைவ சித்தாந்த ஆசிரியர்களிடத்துச் சற்றும் நம்பிக்கை யில்லாத இவரிடத்து ''இறைவாக்கு'' என்று உடன்படுதலை எதிர் பார்க்க முடியாது! அதுதான் அவரது குறிக்கோளுக்கு விரோத மாயிற்றே. இறைவனே நேரில் வந்து கூறினும் உடன்படமாட்டார்!

கா-73 : அவையேயாய் தானேயாய் அவையேதானாய் என்ற அந் வயத்திற்கு இடங்கொடுத்து கலப்பினால் ஒன்றாய் பொருள் தன்மை யால் வேறாய் தொழிற்பாட்டால் உடனுமாய் இறை நிற்கின்ற நுட்பம் மெய்கண்டார் திருவாக்கிலே காணப்படுகிறதே தவிர வட மொழியிலில்லை.

விடை : ''அவையே தானேயாய்'' என்ற தொடர் அவையேயாய், தானேயாய், அவையேதானேயாய் என அந்வயத்திற்கு இடங் கொடுத்து நிற்பதைக் காரணமுடையார் நுட்பமாகக் கண்டு கொண்டார்! ஆயின் வடமொழிச் சூத்திரத்திலும் ''அந்ய : அபி'' என்றும் ''வியாப்திதகஸந்'' என்றும் ''அநந்ய : ஸந்'' என்றும் அந்வயப்படுத்தி நுட்பத்தைக் கண்டிருக்கலாமே! வடமொழி தெரியா தாயினும் வடமொழி வல்லாரைக் கேட்டாவது நுட்பத்தைக் கண்டி ருக்கலாமே! வெறுப்பே இவரது அறிவுக்கண்களை மறைத்துவிட்டது.

கா-74 : வியாப்தியாயிருத்தலின் அநந்யன் என்று காரண காரிய முறையிருப்பதுபோல எக்காரணத்தால் அந்யன் என்பதை வடமொழி சூத்திரம் கூறவில்லை.

விடை : வியாப்தியாயிருத்தலின் அநந்யன் என்று காரண காரிய முறையில் வடமொழிச் சூத்திரத்தில் இல்லை. எவ்வாறு அந்வயப் படுத்தினுல் எவ்வாறு பொருள் தரும் என்பது முந்திய விடையில் தரப்பட்டுள்ளது. இவரது நேர் மொழிபெயர்ப்பில் குதர்க்கவாதம் செய்வதற்காகவே வேண்டுமென்றே தவருன மொழிபெயர்ப்பைத் தந்தார் என்பது இதனுல் நிறுவப்படுகின்றது.

கா-75: முதல் சூத்திரத்திலுள்ள ஸ்திரி நபும்ஸகாதிகளை விட்டு பும்ஸாம் என்று மட்டும் இச்சூத்திரம் கூறுவது மலைவைத் தருகிறது.

விடை:- பாடியத்துள், ''வடமொழி, இரண்டாஞ்சூத்திரத்தினும் புமான்களுக்கு என்று எடுத்துக் கொண்டமையின் ஆண்டு இயை பில்லாத சடப் பொருளை வருவித்துரைத்தல் பொருந்தாமையறிக'' (சூ2,அதி1) என்று விளக்கம் தரப்பட்டுள்ளதே. எனவே முதற் சூத்திரத்து ''ஸ்திரிபும் நபும்ஸகம்'' என்பது சடப்பொருளைக் குறிக்கும் என்பதும் இரண்டாம் சூத்திரத்து ''பும்ஸாம்'' என்பது ஆன்மாக்களைக் குறிக்கும் என்பதும் சித்தாந்தம் கற்கும் சிருரும் அறிவரே. மெய்கண்டதேவ நாயனுரும் வடமொழிச் சூத்திரக் கருத்துப் பற்றியே, ''இவ்வான் மாக்கள் பலவும்'' என்று மேற்கொண்டாரே.

எனவே இவ்வாறு குதர்க்க வாதத்திற்கு வழிவகுக்கவே நேர் மொழி பெயர்ப்பில் இச்சொல் மொழிபெயர்க்கப்படாது விடப்பட்டது தெளிவாகும். காழ்ப்புணர்ச்சி காரணமாக இவ்வாறு இவருக்கு மலைவு ஏற்பட்டது போலும்!

ஆயின் இவரது பொய்யுரைகளை மெய்யென்று நம்பிய பேரறிஞர் ஒருவர் ''அவன் அவள் அது'' என்பதற்கு ''ஆண் பெண் அறி வற்றது'' என்று ஒரு புத்துரை செய்தார்! இதுதான் இவரது காரணங்களால் விளைந்த பயன்!

அங்ஙனமன்று சிவஞானபோத ஆராய்ச்சியில், ''ஆகவே உயிருடைய உயர்திணைப் பிறப்பாகிய ஆண் பெண் என்னும் இரு வேறு அமைப்பிலிருந்தும் அவ்விரண்டும் பயன்படு முகத்தான் தனது படைப்பின் நோக்கத்தைத் தெரிவிக்கும் உயிரற்ற அஃறிணைப் பிறப் பாகிய இவ்வுலகத்திருந்தும் முழுமுதற் கடவுளுண்மையினைத் தெளிவுற நிறுவுதலே ஆசிரியர் மெய்கண்டதேவநாயனுர் தந்திருவுளக் கருத்தா தெனக் கடைப் பிடிக்க'' (பக்-293) என்று கூறப்பட்டது. மேலும், ''ஆண் பெண்ணமைப் பிறப்பட்ட உயிர்களுக்குப் பயன்படு முகத்தால்

உயிரற்ற கல் மண் முதலிய பொருள்களும் அவற்றின் தொகுதியான உலகமுந் தோற்றுவிக்கப் பட்ட நோக்கம் நன்கு புலனுதலின் உயிருடை ஆண் பெண்ணமைப்பைச் சார உயிரில்லா உலகவமைப் பினை வைத்து அதனை அது வென்னுஞ் சுட்டுப் பெயரால் ஆசிரியர் மெய்கண்டதேவநாயஞர் குறித்தருளினர் என்க (பக்-290) என்றும் விளக்கப்பட்டது. எனவே ''அவன் அவள் அது'' என்பதற்கு ''ஆண் பெண் அறிவற்றது'' என்பதே பொருந்தும் என ஆராய்ச்சியுடையார் கருத்துப் பரம்பரையினர் கூறலாம்.

உயிருடைய ஆண் பெண் என்பன ஆன்மாக்களைக் குறிக்க வேண்டும். தோன்றி நின்றழிவதற்கு ஆன்மாக்கள் காரியப்பொருள்கள் இல்லையே! காரியப் பொருள்கள் தானே தோன்றி நின்று அழியும். ஆன்மாக்கள் நித்தப்பொருள்கள் என்பதன்றே சித்தாந்தம்.

அன்றியும் ''ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத் தென்றது'' என்ற மெய்கண்ட தேவ நாயஞர் வாக்காலும் ஆன்மாக்கள் விளக்கப்படுதலை அறியலாமே! ஆன்மாக்கள் சுட்டியறியப் படுந்தன்மையுடைய ஏக தேசப் பொருள்கள் அல்லவே! சுட்டிறந்த வியாகப்பொருள்கள் என்ப தன்றே சித்தாந்தம்.

பாடியத்துள், ''பிரபஞ்சம் அவ்வாறன்றிச் சிறப்பியல்பு பற்றி அநுபவமாய் உண்மையாற் சுட்டப்படும் என்னுங் கருத்தானன்றே ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்ச மென்ருெழியாது உளதாய் எனவிசேடித்ததூஉ மென்க. நித்தப்பொருள் சுட்டியறியப் படாதென்பது ஆருஞ்சூத்திரத்திற் காண்க'' (சூ 1: அதி 1) என்று கூறப்பட்டுள்ளதே. அது கொண்டும் உண்மை தெளியலாமே.

ஆராய்ச்சியுடையாரும், ''தோற்றம் நிலை இறுதி என்னும் முத் தொழிலும் உள்பொருளாகிய மாயையில் நிகழ்வனவேயல்லாமல்'' (பக் - 297) என்றுகூறி முற்கூற்றுக்களை மறுத்துள்ளாரே! இவ்வாறு ஆராய்ச்சியுடையார் தன்னைத்தானே மறுத்தல் என்னுங் கொள்கை யினர் என்பதை அறியாது ஓரிடத்தில் சந்தர்ப்ப வாதமாகக் கூறியதையேகொண்டு முன்பின் பாராது பொருள் கூறுவது விவேக மாகாது. இவ்வாறு சந்தர்ப்ப வாதத்தை உண்மையென மயங்கி ''ஆண் பெண் அறிவற்றது'' எனப்பொருள் கூறிய அறிவுத்திண்மை வியக்கற்பாலதே!

சிவஞானபோத ஆராய்ச்சியின் பதிப்புரையுள், ''ஆசிரியரவர்கள் ஆராய்ச்சி வரைந்தமைத்த அருமையோடு முதனூற் பாவிற்கு நனி மிகச்சிறந்த ஓர் அரிய பேருரையும் வரைந்துள்ளார்கள். அப்பேருரை

பண்டை நக்கீரரின் பேருரையினையும் பின்றைச் சிவஞான முனிவ ரனார் பேருரையினையும் வென்று விளங்கும் விழுமியதொன்ருகும். அத்தகைய பேருரை நூன் முழுவதற்கும் வெளிவரும்பேறு தமிழகம் பெருதது தவக்குறையே'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆராய்ச்சிப் பேருரை எத்தகையது என்பது ''ஒருசோறுபதம்'' என்ற முறையில் காணப்பட்டது. மெய்கண்ட தேவநாயனுரையே மறுத்துச்செல்லும் இத்தகையதொரு பேருரை நூன்முழுவதற்கும் வெளிப்படாதது யாருடைய தவக்குறையோ! ஆராய்தற்குரியதே!

இவ்வாறு மெய்கண்ட தேவநாயனுர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் மாதவச் சிவஞான சுவாமிகள் முதலிய சித்தாந்த ஆசிரி யர்களின் கொள்கைக்கு விரோதமாகப் பலவற்றைக் கூறி இவை யெல்லாம் சைவ சித்தாந்தம் எனக் கூசாமல் எழுதி வைத்தது இவரையன்றி வேறு யாராலும் இயலாது. அவரது அறிவில் மலர்ந்த ஒரு சமயத்திற்கு அவரது கொள்கைக்கேற்ற ஒரு பெயரைச் சூட்டி மகிழ்ந்திருக்கலாம். அவரது சொந்தக் கருத்துக்களைக் கூறுவதில் ஆட்சேபணை இல்லை. ஆனல் அவற்றையெல்லாம் சித்தாந்தம் எனக் கூறி இடைமடுத்தல் பண்பாடு ஆகாது.

கா-76: கர்மத்தை அனுசரித்து என்று வடமொழியிற் பொதுவா யுள்ளது. மெய்கண்டார் திருவாக்கில் இருவினையின் என்று விளக்கம் பெறுகிறது.

விடை: எனவே வடமொழியில் பொதுவாக உள்ளது மெய்கண்டார் திருவாக்கில் விளக்கம் பெறுகிறது என்று கூறி மொழிபெயர்ப்புக் கொள்கையை ஒருவாறு உடன்பட்டார்! முதல் நூலுள் தொகுத்துக் கூறுவதை விளக்கிக் கூறுவதுதானே வழிநூலார் கடன். இஃதறியாது புலம்புவதால் யாது பயன்?

ஆனல் உண்மை இவரது கூற்றுக்கு நேர்மாருனது. கர்மம் என்பது ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என்ற மூன்றையுங்குறிக் கலாம், ஆனல் ''அநுஸாரத:'' என்பதால் அச்சொல் சஞ்சிதத்தைக் குறிக்கும். (பிறவிக்குக் காரணம் சஞ்சித மாகலான்). மெய்கண்டார் கூறிய இருவினை என்பதும் ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என்ற மூன்றையுங் குறிக்கலாம்! எனவே பொதுவாயுள்ளதுதான். ஆனல் விளக்கம் பெறுகிறது என்பதுதான் வேடிக்கை. எந்த விளக்கத்தை எப்படிப் பெற்ருர் என்பது அவருக்கே வெளிச்சம்! அவரது இருமை வினைதான் காரணமோ? எனவே இருவினை என்பதற்குச் சஞ்சிதம் என்று பொருள் கொள்ளுதற்குக் காரணம் வடமொழி மூலத்தில் உள்ள ''கர்மாநுசாரத:'' என்பதேயாகும். இதனைக் காரணமுடை யார் கருத்துப் பரம்பரையினர் உணர்தல் நன்று.

கா-77: மூன்றும் சூத்திரம், ''நேதிதோ மமதோத்ரே காதக்ஷோபரதி போதத: ஸ்வாபே நிர்போகதோ போதே போத்த்ருத்வாதஸ்த் யணுஸ்தநௌ'' என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு, ''இது இல்லை இது அல்ல என்பதாலும் எனதுடல் என்று அழுத்தமாகச் சொல்வதாலும் சொப்பனத்தில் கண் முதலியவற்றின் அறியும் தன்மை யாலும், சுழுத்தியில் புசிக்கும் தன்மையின்மையாலும், விழிப்பில் அறிவிக்க அறிவதாலும், உடலினுள் ஆன்மா உண்டு'' என்பது. மெய்கண்டார் திருவாக்கு, ''உளதில தென்றலின் எனதுடல் என்றலின் ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில் உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின் மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா'' என்பது. வடமொழியில் இந்திரியங்களை அறிதலின் என்ற காரணம் இல்லை ஐம்புலன் அறிதலின் ஒடுக்கம் அறிதன் என்ற இரண்டு காரணங்களும் மெய்கண்டார் வாக்கிலுண்டு ஐம்புலன் அறிதலின் என்ற காரணம் இந்திரியான்ம வாதிகளை மறுப்பதற்கெழுந்தது. (சிவ ஞான பாடியம் சமாஜ பதிப்பு 323-325)

விடை: வடமொழிச் சூத்திரத்தின் மொழி பெயர்ப்பைக் காசிவாசி) செந்திநாதையரவர்கள் பதிப்புப்படி காண்போம். (1) நஇதித:= (ஆன்மா) இலது என்றலானும், (2) மமதா உத்ரோகாத்:= (உடம்பை) எனது என (பிறிதின் கிழமைப் பொருள் பட வழங்கும்) மிகுதிப்பாட் டானும், (3) அக்ஷபோதத:— ஐம்பொறிகளைக் கொண்டு அறிதலானும் (4) உபரதி போதத:= ஒடுக்கத்தை அறிதலானும் (அஃதாவது, கனவின் கண் நிகழ்ந்தவற்றை நனவின் கண்ணே மயங்கி அறிதலானும்), (5) ஸ்வாபே நிர்போகத:= நித்திரையிற் (பிராண வாயுவுக்கு) இன்ப துன்ப நுகர்ச்சி இன்மையானும், (6) போதே போத்த்ருவாத்:= சாக்கிரத்தில் அறிவிக்க அறிதலானும், (7) தநௌ அணு: அஸ்தி:= இவை அனைத்தும் கூடிய உடலகத்தே ஆன்மா என்பது ஒன்று உண்டு.

எனவே காரணமுடையாரின் நேர்மொழி பெயர்ப்பின் லட்சணம் வெட்ட வெளிச்சமாகும். ''இது இல்லை இது அல்ல'' என்பதும், ''சொப்பனத்தில் கண் முதலியவற்றின் அறியும் த்ன்மையாலும்'' என்பதும் காரணமுடையாரின் சொப்பனத்தில் உதித்த மொழி பெயர்ப்பாகும். காரணமுடையார் நேர்மொழி பெயர்ப்பை மட்டுமாவது வடமொழியை நேர்மையாக அறிந்தவர்களிடம் கேட்டு எழுதியிருக்க லாம். அவ்வாறு செய்திருந்தால் மூலத்தில் இல்லாதவற்றிற்கும் மொழி பெயர்ப்பு எனக் காட்டுவதை தவிர்த்திருக்கலாம்! காழ்ப் புணர்ச்சி கண்ணை மறைக்கின்றதே! எனவேதான் ஆன்றோர் காய்தல் உவத்தல் இன்றி ஆய்தல் அறிவுடையார் கண்ணதே என்றனர். அவ்வாறு அறிவுடையோர் ஆவது எளிதான காரியமில்லையே!

''வடமொழியில் இந்திரியங்களை அறிதலின் என்ற காரணம் இல்லை'' என்றார். ஆனால் மெய்கண்டதேவநாயனர் ''ஐம்புலன் அறிதலின்'' என்றே கூறினர். புலன் என்பது ஆகு பெயராற் பொறிகளைக் குறிக்கும். வடமொழியில் ''அக்ஷம்'' என்பது உபலக்கணத்தால் ஐம்பொறிகளைக் குறிக்கும். எனவே ''இந்திரியங்களை அறிதலின் என்ற காரணம் இல்லை'' என்பது திரித்துக் கூறுதலாகும். இவ்வாறு திரித்துக் கூறுதல் இவர்க்கு இயற்கையே!

கா-78: வடமொழியில் உண்டியில்லை என்ற காரணம்தான் உளது; உடம்பின் சேஷ்டிதம் இல்லை என்ற மற்றொரு காரணமும் மெய் கண்டார் திருவாக்கிலுள்ளது.

விடை: வினையின்றி உண்டி நிகழாது. ஆகலின் வினையை ''ஸ்வாபே நிர்போகத:'' என்பதில் இனம்பற்றிக் கொள்ளவைத்தது மூலம். இது பற்றியே பாடியத்துள், ''உண்டிவினை உம்மைத்தொகை. அஃது உண்டியும் வினையுமின்றி என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. உண்டியின்மை மாத்திரையே கூறிய வடமொழிச் சூத்திரத் திற்கும் இனம்பற்றி வினையுண்மையு முடன்கோடல் கருத்தென்க'' (சூ3-அதி5) என்று கூறப்பட்டது. எனவே மெய்கண்டார் மூலத்தின் கருத்தைக் கொண்டே மொழிபெயர்த்துள்ளது வெளியாகும். இவ்வாறு கேள்விகளைப் பாடியத்திலிருந்து திருடுதலும் அவற்றைத் தாம்கண்டது போலக் காட்டுதலும் இவரது இயற்கை. பாடியத்தில் கண்டதைக் காண்பித்து அதன்மேல் காரணங் காட்டியிருந்தால் அறிவாற்றலைக் காட்டுவதாய் அமையும்!

கா-79: சமூகான்ம வாதிகளை மறுப்பது உடம்பு மாயாகாரியங்களால் ஆக்கப்பட்டமையால் என்பது. இதை ''மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா'' என்று மெய்கண்டார் கூறுகின்றார். வடமொழியில் தனு வினுள் ஆன்மாவுளது என்று வெறுமையாயுள்ளது.

விடை: தனு என்பது மாயா காரியப்பொருள்தானே, அது பற்றியே பாடியத்துள், ''தூலவுடம்பு சூக்கும வுடம்பு பரவுடம்பென்னும் மூன்று மடங்கத்தநு என்றார்'' (சூ 3:அதி7) என்று கூறப்பட்டுள்ளதே. அதனை விரித்து மெய்கண்ட தேவநாயனர் ''மாயா வியந்திர'' என்னும் அடை கொடுத்தார். எனவே வடமொழிச் சூத்திரத்தில் அடக்கிக் கூறியிருப்பதை மெய்கண்டார் விளக்கிக் கூறினர் என்பது பெறப்படும். முதல் நூலின் தொகுத்துக் கூறியவற்றை வழிநூலின் விரித்துக் கூறுதல் தானே மரபு. இஃதறியாது கூறுதல் பிதற்று மொழியாய் முடியுமே.

கா-80: நான்காம் சூத்திரம். ''ஆத்மாந்த: கரணதந்யோப் யந்விதோ மந்த்ரி பூபவத் அவஸ்தா பஞ்சகஸ்தோ அதோமலருத்தஸ் வத்ருக் க்ரிய:'' என்பது. இதன் நேர்மொழிபெயர்ப்பு, அந்தக்காரணத்துக்கு அந்நியனுயினும் ஆன்மா தனது ஞானக்கிரியைகள் மலத்தினல் மறைக்கப்பட்டிருப்பதால் மந்திரியுடனிருக்கும் அரசன்போல அந்தக் காரணத்தோடு கூடியிருப்பதால் ஐந்தவஸ்தைகளில் இருப்பவன் ஆகிருன்'' என்பது. மெய்கண்டார் திருவாக்கு, ''அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று அவை சந்தித்தது ஆன்மா சகசமலத்துணராது அமைச்சர சேய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே'' என்பது. வடமொழியில் பொதுவாக மலத்தால் மூடப்பட்ட என்றிருப்பதால் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களுள் எதனுல் மூடப்பட்டதென்பது விளங் காது. மாயாமலம் மறைப்பது என்று கூறும் வாதிகளை வடமொழிச் சூத்திரங் கொண்டு மறுக்கஇயலாது.

விடை ''சகச மலத்துணராது என்று மெய்கண்டார் விளக்குகின்ருர்'' என்ருர். எனவே வடமொழிச் சூத்திரம சுருக்கமாகக் கூறுவதைத் தமிழ்ச் சூத்திரம் விளக்குவது என்று உடன்பட்டார். இதன் பின்னும் மொழிபெயர்ப்பல்ல எனச் சாதிப்பது எற்றுக்கோ!

சகச மலம் என்பது ஆணவமலம் எனப்பொருள் தரும் என்பது கரணமுடையார் கருத்து. சகசம்=ஆணவம் என யாண்டுக் கண்டாரே தெரியவில்லை. அவரது சுய அகராதியில் கண்டிருப்பார் போலும்! இதுபற்றி முதல் சூத்திரத்துள் ''மலத்துளதாம்'' என்ற விடத்தும் ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றையும் கொள்வாரோ? அல்லது மெய்கண்டாரையும் மயங்கக் கூறினர் என்று குற்றம் சாட்டுவாரோ?

அந்தக் கரணங்களுக்கு வேருயினும் என்றமையான் மலம் என்பது மாயைக்கு வேருனது தெற்றெனப் புலப்படுமே! மாயா காரியமாகிய உடலால் வினை ஈட்டப்படுவதால் மலம் வினையினும் வேறுபட்டது விளங்குமே! எனவே மலம் என்பது ஆணவ மலத்தைத்தான் குறிக்கும் என்பது அறிவுடையோர்க்கு நன்கு விளங்குமே. இன்னும் ''அறியா மையின் காரணம் ஆணவமலம்'' என்று அவரே உடன் பட்டமையின் ருத்த (மறைப்புண்ட) என்ற மூலத்தால் மறைத்தற் குரிய ஆணவத்தைக் குறித்து நிற்குமாகலின் அதனுனும் அறியலாமே.

மேலே கூறப்பெற்றவைகளால் வடமொழிச் சூத்திரங் கொண்டே மாயாமலம் மறைப்பது என்னும் வாதிகளை மறுக்க இயலுமே. எனவே ''மாயாமலம் மறைப்பது என்று கூறும் வாதிகளை வடமொழி சூத்திரங்கொண்டு மறுக்க இயலாது'' என்று காரணமுடையார் கூறுவது சொப்பனத்தில் உளறுதலாய் முடிகின்றது.

கா-81: மலத்தால் மூடப்பட்ட கிரியை என்பதற்கு நேராக மெய் கண்டார் வாக்கில் ஒன்றுமில்லை.

விடை: ''கிரியாசத்தி ஞானசத்தியின் வேறன்மை'' என்பதும் ''ஞான சத்தியும் கிரியா சத்தியும் இயற்கையால் தம்முள் வேறுபாடுடைய வல்ல'' என்பதும் சித்தாந்தமாகலின் இரண்டையும் உட்கொண்டு ''உணராது'' எனமொழிபெயர்த்தார். எனவே ''மெய்கண்டார் வாக்கில் ஒன்றுமில்லை'' என்பது பொருந்தாது.

கா-82: ஐந்தாம் சூத்திரம் ''விதந்த்யக்ஷாணி பும்ஸார்த்தாந்நஸ்வயம் ஸோபி சம்பு நாதத்விகாரீ சிவச்சேந்ந காந்தோயோ வத்ஸதம் நயேத்'' என்பது. இதன் நேர்மொழிபெயர்ப்பு, ''புருஷனால் (அறிவிக்கப்பட்ட) பொருள்களை இந்திரியங்கள் அறிகின்றன, ஸ்வயமாக அறிவதில்லை, அவனும் சம்புவினால் அறிகின்றான் ஆகையால் சிவன் விகாரி ஆவான் எனில் ஆகான் காந்தக்கல் இரும்பைச் சேஷ்டிப்பது போல அந்தசிவன் அந்த ஆன்மாவை சேஷ்டிப்பிக்கிறான்'' என்பது. மெய்கண்டார் திருவாக்கு, ''விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண்மூக்கு அளந்தளந்தறியா ஆங்கவை போலத் தாந்தமுணர் விற்றமியருள் காந்தம் கண்ட பசாசத் தவையே'' என்பது. இந்திரியங்கள் உயிரை அறிவதில்லை உயிர் தன்னையும் தலைவனையும் அறிவதில்லை என்ற கருத்துக்கள் மெய்கண்டார் வாக்கிலுண்டு வடமொழியிலில்லை.

விடை: இவரது நேர்மொழிபெயர்ப்பில் புருஷன் ஸ்வயம் விரிகா முதலிய சொற்கள் மொழிபெயர்க்கப்படவில்லை. ''விதந்த்யக்ஷாணி பும்ஸார்த்தாந்'' என்பதுமூலம். ''உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு அளந்தளந்தறிந்து'' என்பது மெய்கண்டாரது மொழி பெயர்ப்பு. ''ஸ்வயம் நவிதந்தி'' என்பது மூலம்- ''அறியா'' என்பது அதன் பெயர்ப்பு. ''சம்புநா அபிவேத்தி'' என்ற மூலத்திற்கு ''தாந்த முணர்வின் தமியருள்'' என்பது பெயர்ப்பு.

காரணமுடையார் ''இந்திரியங்கள் உயிரை அறிவதில்லை உயிர் தன்னையும் தலைவனையும் அறிவதில்லை என்ற கருத்துக்கள் மெய் கண்டார் வாக்கிலுண்டு வடமொழியிலில்லை'' என்றார். ஆனால் இக் கருத்துக்களைத் தமிழ்ச் சூத்திரத்தின் எப்பகுதிகொண்டு எம்முறையே விளங்கினர் என்பதை விளக்கவில்லை. காரணம் அவருக்கு அது தெரியாது என்பதுதான்! ''ஸ்வயம்'' என்ற மூலத்தால் தமிழ்ச் சூத்திரத் திற்கு இவர் கூறும் விளக்கங்கள் தரப்படுகின்றன என்பதை வட மொழி வல்லாரிடம் கேட்டுத்தெரிந்திருக்கலாம்! உண்மையை உணர்த்த வேண்டும் என்னும் உயர் நோக்கம் உடையவர்களே அவ் வாறு ஆய்வை மேற்கொள்ள முடியும். ''பொய்யுடை யொருவன்

சொல்வண்மையால் மெய்போலும்மே'' என்ற குறிக்கோள் உடைய காரணமுடையார்க்கு அதற்கெல்லாம் ஏது அவகாசம்!

கா-:83 சம்புவினுல் அறிகிருன் என்பது வடமொழி. சிற்சத்தியால் (தமியருள்) என்பர் மெய்கண்டார்.

விடை: ''சம்பு என்பது ஆகுபெயரால் சிற்சத்தியைக் குறிக்கும் எனவே அச்சொல் ''சம்புவின் அருள்'' என்ற பொருளேயுடையதாகும். தமிழ்ச் சூத்திரத்துள் அப்பகுதி ''தமியருள்'' என்று கொடுக்கப் பட்டுள்ளது. தமி என்பது முதல்வனேக் குறித்து நிற்பதாகலின் தமியருள் என்பது முதல்வனது அருள் என்று பொருள்படும். எனவே இரண்டும் ஒன்று தானே! ''தமியருள் என்பது தமியாகிய முதல்வன தருளென ஆண்டைக்குரிய திரோதான சத்திலயை உணர்த்தி நின்றது என்று பாடியத்துள் விளக்கம் தரப்பட்டுள்ளதே. சம்புவும் சிற்சத்தியும் வேறெென மயங்கிக் கொண்ட போது எழுதினுர் போலும்!

கா-84: சிவன் விகாரியாகான் என்று வடமொழி வெளிப்படையாகக் கூறுவதை மெய்கண்டார் நுட்பமாக ''அவையே'' என்ற சொல்லினுள் உணரவைத்தார்.

விடை: அடடா! என்னே நுட்பம்! என்னே நுட்பம்! இந்த நுட்பத்தை எவ்வாறுகண்டு பிடித்தாரோ! சிவன் என்பது ஒருமை. அவை என்பது பன்மை. பன்மைச் சுட்டுப் பெயர் சிவன் என்ற ஒருமைப் பொருள் தரும் என்ற விந்தையான கண்டு பிடிப்பு இவரைத் தவிர வேறு யாவராலும் செய்ய இயலாத ஒரு செயலாகும். ஒருமை பன்மை வேறுபாடு அறியாததால் விளேந்த விபரீதம்!

தமிழில் இலக்கணம் அறியாவிட்டாலும் சித்தாந்தம் அறிந்தவர் களிடம் அவை என்ற சொல்லின் பொருளே விசாரித்து எழுதியிருக்க லாம்! அது கிடக்க

பாடியத்துள் ''ஆகாலான் அது பற்றி முதல்வன் விகாரியாதலில்லே என்பது குறிப்பெச்சம்'' என்று காட்டப் பட்டுள்ளதே! அது கொண்டாவது விளங்கியிருக்கலாமே. ''பாடியம் பன்முறை படிக்க'' என் பிறருக்கு மட்டும் உபதேசம் செய்பவர் தான் மட்டும் அதனே மறக்கலாமா?! மெய்கண்டார் நுட்பமாக அவையே என்ற சொல்லினுள் உணர வைத்தார்'' என்று கூறித் தம் நுட்பமான அறிவை விளம் பரப்படுத்தியிருக்க வேண்டாம்! வடமொழிச் சூத்திரத்தில் காணப் பட்ட காரணத்தாலன்ருே குறிப்பெச்சமாகக் கொள்ளுதற்கு ஏற்புடைத் தாயிற்று.

கா-75ல் ''பும்ஸாம்'' என்றுமட்டும் இச்சூத்திரம் கூறுவது மலைவைத் தருகிறது'' என்ருர். இச்சூத்திரத்தும் பும்ஸாம் என்று மட்டுமே கூறியுள்ளது. ஆயின் இவ்விடத்தில் காரணமுடையாருக்கு மலைவு ஏற்படாதது அவரது கருத்துப் பரம்பரையினருக்குக்கூட வியப்பை உண்டாக்கும்!

கா-85: ஆரும் சூத்திரம், ''அத்ருச்யம் சேத ஸத்பாவோத்ருச்யம் சேஜ்ஜடி மாபவேத் சமபோஸ்தத் வ்யதிரேகேணஜ்ஞேயம் ரூபம்விதுர் புதா:'' என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு, ''சம்புவின் ரூபம் காணப்படாததாம் எனின் அசத்தாகும், காணப்படுவதெனின் ஜட மாகும். அவ்விரண்டிற்கும் வேருன ஒன்ருல் அறியத்தக்கதென்று அறிஞர் அறிகின்றனர்'' என்பது. மெய்கண்டார் திருவாக்கு, ''உணருரு அசத்தெனின் உணராதின்மையின் இருதிறனல்லது சிவ சத்தாமென இரண்டு வகையின் இசைக்குமன்னுலகே'' என்பது. காணப்படுவது படாதது என்ற காரணம் காட்டுவது வடமொழி. அறிவினல் அறியப்படும் சுட்டுப்பொருளெல்லாம் அசத்தென்பர் மெய் கண்டார்.

விடை: இவரது நேர்மொழிபெயர்ப்பில் பல வடசொற்களை வழக்கம் போலவே பொருளெழுதாது விட்டார். சிலவற்றைப்பிழைபட மொழி பெயர்த்தார். எனவே செந்திநாதையரவர்கள் மொழிபெயர்ப்பு கீழே தரப்படுகின்றது.

சம்போரூபம் = சிவனுர் சொரூபமானது; அத்ருச்யம்வேத் = ஒரு வாற்ருனும் அறியப்படாதாயின்; தஸ்ய அஸத்பாவம் பவேத்=அதற்கு (முயற் கோடுபோல) இலதாம் தன்மை உளதாம்; த்ருஸ்யம் வேத்= (கட முதலிய போலச்சுட்டி) அறியப்படுவதாயின்; தஸ்ய ஜடிமா பவேத் = அதற்குச் சடத்தன்மை உளதாம்; தத்வியதிரேகேண = (அறியப் படாமையும் அறியப் படுகையுமாகிய) அவ்விரண்டுக்கும் வேருய் (பதிஞானத்தினுல்); ஞேயம் இதி புதா: விது: = (அச்சிவ சொரூபம்) அறியற்பாலதென்று அறிஞர்கள் அறிகின்ருர்கள்.

எனவே காணப்படுவது படாதது என்பன இவரது கூற்றுக்க ளாகும். அறியப்படுவது படாதது என்பனவே வடமொழி மூலத்தில் உள்ள சொற்பொருளாகும். அஃதாவது த்ருக்=அறிவது' த்ருச்யம் = அறியப்படுவது; அத்ருச்யம்=அறியப்படாதது; விசாரித்து எழுதினுல் உண்மையை உடன்படவேண்டும் என்ற காரணத்தால் தனக்குத் தோன்றியதைப் பொருளென எழுதினர். இஃது இவரது நேர்மொழி பெயர்ப்பின் லட்சணம்!

இனிக் ''காட்சி அளவை'' என்பது கீழை நாட்டுத் தர்க்க நூல்களில் காணப்படுவது தானே! அச்சொல் ஐம்பொறிகளால் அறியப்படுவதைத் தானே குறிக்கின்றது. எனவே காணப்படுவதும் அறியப்படுவதும் ஒரு பொருளைக் குறித்து நிற்பனதானே. அங்ஙன மாகவும் ''காணப்படுவதும்'' ''அறிவினால் அறியப்படுவதும்'' என வேற்றுப் பொருள் போலக் காட்டுவது சிறுமையன்றோ!

அது மட்டுமன்று. ''அறிவினால் அறியப்படும் சுட்டுப்பொரு ளெல்லாம் அசத்தென்பர் மெய்கண்டார்'' என கூறுகின்றாரே. அவர் காட்டிய மெய்கண்டார் திருவாக்கில் எப்பகுதியுள் அவ்வாறு கூறப்பட்டுள்ளது? அப்பகுதியையாவது காட்டியிருக்கலாமே!

அன்றியும் தமிழ் முதல்நூல் செய்ய வந்த ஆசிரியர் ''அசத்து'' என்னும் வடமொழியைக் கையாளுவாரா? தமிழ் நாட்டினர்க்கு ''அசத்து'' என்ற வடமொழிச் சொல்தான் புரியுமா?

கா-86: சத்துக்கும் அசத்துக்கும் உள்ள நுட்பமான வேற்றுமையின் அடிப்படை மெய்கண்டார் வாக்கிலேதான் காணப்படுகின்றது.

விடை: அடடா! என்ன அருமையான கண்டுபிடிப்பு! சத்து, அசத்து என்பன வடமொழிச் சொற்கள். எனவே மெய்கண்டார்-தமிழ் முதல் நூல் செய்தவர்-ஏன் வடமொழிச் சொற்களைக் கையாண்டார் என்ப தன்றோ அவரது ஆய்வின் அடிப்படையாக இருக்க வேண்டும்! அவற்றிற்குத் தமிழ்ச் சொற்கள் இல்லையா? அல்லது தமிழ்ச் சொற்களைக் கூறினால் இவர் போன்ற தமிழர்கள் விளங்கிக் கொள்ள மாட்டார்களா? இவற்றை விட்டு விட்டு வடமொழிச் சொற்களுக்கு இடையேயுள்ள நுட்பமான வேற்றுமையின் அடிப்படையைக் கண்டு வியந்து பாராட்டியுள்ளாரே! என்னே Reductio ad absurdum''!

அன்றியும் அந்த ''அடிப்படை'' யாதென்பதைக் கூறவில்லை. அடிப்படையைக் கூறியிருந்தால் அது கொண்டு மூலத்தில் உண்டா இல்லையா என்பதைத் தெளியலாம். அவ்வாறு கூறாத படியால் அவர் அறியவில்லை என்பதே போதரும். அறியாமை காரணமாகக் கூறுவன பிதற்றலாய் முடியும்.

கா-87: அசித்துப்பொருளைச் சத்தென்றும் அசத்தென்றும் கூறுவதன் உட்கருத்தை மெய்கண்டார் வாக்கிலேதான் காணலாம்.

விடை: அசித்துப் பொருள்களில் சத்துப்பொருள்களும் உண்டு. அசத்துப்பொருள்களும் உண்டு. சத்துப்பொருள்கள் ஆணவகன்ம மாயைகள். அசத்துப்பொருள் காரியப்பிரபஞ்சம். ''த்ருத்யஞ்சேத்'' என்ற மூலத்தால் சத்துப்பொருள்கள் விலக்கப்பட்டன. ஏனெனில்

ஆணவ கன்ம மாயைகள் சுட்டியறியப்படாத பொருள்கள். எனவே மூலத்தில் உள்ளது தானே அவர் கூறும் உட்கருத்து. காழ்ப்புணர்ச்சி காரணமாக இவரால் காணஇயலவில்லை. காமாலைக் கண்ணுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள்!

கா-88: சித்தும் சத்துமாக விளங்குவதே சிவம் என்பதை வடமொழி சூத்திரம் விளக்கவில்லை.

விடை: தமிழ்ச்சூத்திரம் ''சிவசத்து'' என்றது. வடமொழி மூலம் ''சம்போ ரூபம்'' என்றது. இரண்டும் சமமாகத்தானே காணப்படு கின்றது. விளக்கவில்லை என்று எவ்வாறு கண்டார்?

''சித்தும் சத்துமாக விளங்குவதே சிவம்'' என்றூர். சிவசத்து என்பதனுள் சிவம் என்பது ''சித்தும் சத்தும்'' என்றால் சத்து என்பது மீண்டுங் கூறியதாய் முடியுமே! அங்ஙனமன்று சிவம் என்பது சித்துப் பொருளை எடுத்துக் காட்டும். என்வே சிவசத்து=சித்துச்சத்து எனக் கூறின் அவ்வாறே சம்போ என்பது சித்தையும் ரூபம் என்பது சத் தையும் குறித்து நிற்றலில் என்ன தடையோ?

அன்றியும் சிவசத்து என்பது பண்புத்தொகையன்றே. அதனை உம்மைத்தொகையாக வைத்துச்சித்தும் சத்தும் எனப்பொருள் விரித் தல் பொருந்துமா! சித்தாகிய சத்து என்பது ஒரு பொருள்மேல் நிற்கும். ''சித்தும் சத்தும்'' என்பது இரு பொருள் நிற்கும். இவ் வாறன வேறுபாட்டை உணரமுடியாதவர் மேல்நாட்டுத் தர்க்க முறை யில் ஆராய்ந்து உண்மையை நிலை நாட்டுவதாகக் கூறுவது பெருங் கூத்து அன்றே!

கா-89: சித்துக்கும் அசித்துக்கும் உள்ள வேறுபாட்டை மெய்கண்டார் வாக்கிற் காணலாம். வடமொழிச் சூத்திரத்தில் காணஇயலாது.

விடை: இருமொழிச் சூத்திரங்களுள் சித்துக்கும் அசித்துக்கும் உள்ள வேறுபாட்டை எந்தப் பகுதியால் மெய்கண்டார் வாக்கில் காண முடிந்தது? வடமொழிச் சூத்திரத்தில் காண இயலாது போயிற்று? அப்பகுதியையாவது' காட்டியிருந்தால் விளக்குமாற்றல் விளக்கலாம். வேறுபாடு வடமொழிச் சூத்திரத்திலே உண்டென்பது கா-87ன் விடையில் காண்க.

கா-90: சிவசமவாதம் சிவாத்துவிதம் முதலிய கொள்கைகட்கு வட மொழிச் சூத்திரம் இடந்தரும். மெய்கண்டார் வாக்கு இடந்தராது. (85-90 காரணங்களை நன்கு தெளிதற்குப் பாடியம் பக்கம் 389-441 பன்முறை படிக்கவேண்டும்).

விடை: காரணமுடையார் ''மெய்கண்டார் அருளிச்செய்த சிவஞான போதம் தமிழ்முதல்நூலே வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட வில்லை என்பதுதான் உண்மை'' என்று அறிந்தார்போலக் கூறு கின்றார். அங்ஙனமாயின் மெய்கண்டார் சூத்திரப் பகுதியை எடுத்துக் காட்டி எவ்வாறு இடந்தராது என்பதை நிரூபிக்க வேண்டும். அது போல வடமொழிச் சூத்திரப் பகுதியை எடுத்துக்காட்டி எவ்வாறு இடந்தரும் என்பதை நிரூபிக்க வேண்டும். அவ்வாறு இல்லாமல் ''மொட்டையாக'' இடந்தரும் இடந்தராது என்றால் காரணமாகுமா? வெறும் பிதற்றலாய் அன்றோ முடியும்.

இவரால் சூத்திரங்களில் காரணம் காட்டமுடியவில்லை. எனவே, ''பாடியம் பன்முறை படிக்க'' என்ற உபதேசத்தில் இறங்கி விட்டார். அந்தோ! பரிதாபம்! பன்முறை எதற்காகப் படிக்க வேண்டும்? ஒரு முறை படித்தாலே வெள்ளறிவுடையோனும் விளங்கிக் கொள்வானே! பாடியகாரர், ''இனி ஆசிரியர் ஆருஞ் சூத்திரத்திற்கு வார்த்திகப் பொழிப்புரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த் தருளிச் செய்கின்றார்'' என்று வெளிப்படையாகக் கூறியுள்ளதை இவரது பேரறிவாலும் விளங்கிக் கொள்ள முடியவில்லையே!

இவ்வாறு கூறியது கொண்டு கீழ்க்கண்டவாறு அறிந்து கொள்ள லாமே! ஆசிரியர் மெய்கண்ட தேவநாயனார் வடமொழிச் சூத்திரங் களுக்குத் தமிழில் வார்த்திகப் பொருளுரைக்க எண்ணினார். எனவே வடமொழிச் சூத்திரத்தைத் தமிழில் மொழிபெயர்த்தார். இதனை ஒரு முறை பார்த்தாலே போதுமே! விளங்கிக் கொள்ளலாமே! பாடியம் பன்முறை படிக்க என்று உபதேசத்தில் இறங்கியவர் பாடிய மொழி களைப் பொன்னேபோல் போற்றாமல் தூற்றலாமா? ''ஊருக்கு உப தேசம் தனக்கில்லை'' என்பதன்றோ அவர்தம் கொள்கையாய் முடி கின்றது.

எனவே பாடியத்துள் கூறப்படுவன எல்லாம் இருமொழிச் சூத் திரங்களுக்கும் பொதுவான விளக்கந்தான் என்பதுதானே பெறப்படும். அதுகொண்டு ''வடமொழி சூத்திரம் இடந்தரும்: மெய்கண்டார் வாக்கு இடந்தராது'' என்பது காரணமுடையார் கூறுவது வெறும் பிதற்று மொழியன்றோ!

மேலும் பாடியத்துள் எவ்விடத்தில் ''வடமொழிச் சூத்திரம் இடந் தரும். மெய்கண்டார் வாக்கு இடந்தராது'' என்று கூறப்பட்டுள்ளது? வெளிப்படையாகக் கூறா விட்டாலும் மறைமுகமாவது கூறப் பட்டுள்ளதா? கழகப்பதிப்புள் அவ்வாறு காணப்படவில்லையே! ஒரு வேளை கனவிற் கண்டாரோ! பாடியகாரர் வெளிப்படையாகவும் குறிப் பாகவும் மொழிபெயர்ப்பு என்பதைத்தான் வற்புறுத்தியுள்ளார்.

காரணமுடையாரின் கருத்துப் பரம்பரையினராவது ஒருமுறை படித்தே விளங்குவார்கள் என்று நம்பலாம்!

கா-91: அறிஞர் அறிகின்றனர் என்பதற்கும் இசைக்குமன்னுலகே என்பதற்கும் உள்ள வேறுபாடு வெளிப்படை.

விடை: ''வழக்கெனப் படுவதுயர்ந்தோர் மேற்றே-நிகழ்ச்சி அவர்கட் டாகலான்'' என்ற தமிழ் மரபுப்படி உலகு என்பது உயர்ந்தோரைக் குறிக்கும். அறிஞரே உயர்ந்தோர் ஆவர். எனவே தமிழ் மரபிற் கேற்ப ''உலகு'' என மொழிபெயர்த்தார். அறிந்தாலன்றிக் கூற இயலாது. எனவே ''இசைக்கும்'' என மொழிபெயர்த்தார். வெளிப் படையான வேறுபாடு என்ன என்பது காரணமுடையாருக்கே வெளிச்சம்! அது வடமொழி; இது தமிழ் மொழி. இவற்றைத்தவிர வேறென்ன வேறுபாடோ!

இனித்தமிழ் முதல்நூல் எழுதுவது கருத்தாயின் ''இசைக்கு மன் னுலகே'' எனக் கூறியது பொருந்துமா? கூறியது கூறல் என்பது ஒருபுறமிருக்க, ஈராண்டில் எந்த உலகு வந்து மெய்கண்டாரிடம் இசைத்தது என்பதையன்றோ இவர் ஆராய்ந்திருக்க வேண்டும்! எல்லாம் கற்பனை என்னும் இவரிடமே ''absurdum'' வெளிப்படு கின்றது.

கா-92: ஏழாம் சூத்திரம், ''நாசித் சித் ஸந்தி தௌ கிந்து நவித் தஸ்தே உபேமித ப்ரபஞ்ச சிவயோர் வேத்தாயஸ்ஸ ஆத்மா தயோ: ப்ருதக்'' என்பது. இதன் நேர்மொழி பெயர்ப்பு, ''அசித்து சித்தின் சந்நிதியில் இல்லை. ஏனெனில் அந்த இரண்டும் ஒன்றையொன்று அறிவதில்லை, பிரபஞ்சத்தையும் சிவத்தையும் அறிபவன் எவனோ அவன் அவ்விரண்டிற்கும் வேறான ஆன்மாவாம்'' என்பது. மெய் கண்டார் திருவாக்கு, ''யாவையும் சூனியம் சத்தெதிராகலின் சத்தே அறியாத சத்தில தறியாது இருதிறனறிவுளது இரண்டலா ஆன்மா'' என்பது. அசத்து சத்தென்பர் மெய்கண்டார். அசித்து சித்து என்பது வடமொழி.

விடை: வழக்கம்போலவே தமது நேர் மொழிபெயர்ப்பில் அசித்து, சித்து, சந்நிதி, பிரபஞ்சம் முதலிய சொற்களுக்கு நேர்மொழி பெயர்ப்புத் தரவில்லை. எனவே செந்திநாதையரவர்கள் மொழி பெயர்ப்பு கீழே தரப்படுகின்றது.

சித்சந்நிதௌ அசத்நவேத்தி = சிவனாகிய சித்தின் சந்நிதியில் (பிரபஞ்சமாகிய) அசித்து அறியமாட்டாது (விளங்கித் தோன்றாது); தேஉபமித: நவித்த=அந்தச் (சிவமும் பிரபஞ்சமும் ஆகிய) இரண்டும் ஒன்றையொன்று அறியமாட்டா; ய:பிரபஞ்ச சிவயோ: வேத்தா =

எவன் பிரபஞ்சத்தையும் சிவனையும் அறிகின்றனே; ஸ=அவன்; தயோ:ப்ரதக் ஆத்மா ஸ்யாத் = அவ்விரண்டற்கும் வேருகிய ஆத்மா வாம்.

''அசத்து சத்தென்பர் மெய்கண்டார். அசித்து சித்து என்பது வடமொழி'' என்றார் காரணமுடையார். அசித்து சித்து என்பது வட மொழி என்றல் அசத்து சத்து என்பன தமிழ் எனக் கருதுகின்றரா? நான்குமே வடசொற்கள்தான். எனவே அசித்து சித்து என்பன என்ன பொருளில் கையாளப்பட்டுள்ளன என்பதை அறிந்து அதற்கேற்ப அசத்து சத்து எனப் பொருள் கொடுத்தார் மெய்கண்டார்.

சித்தாந்தத்துள் முப்பொருள்களும் சத்தே. எனவே சத்து என்பது எவ்வாறு சிவத்தை மட்டும் குறிக்க இயலும்? அதனை ஆய்ந்திருந் தால் உண்மை புலனுகும். வடமொழி மூலத்தில் சித்து என்று கூறப் பட்டதால் அதற்கேற்பச் சத்து என்பதற்கு சிவம் என்று பொருள் கூறப்பட்டது. ஆயின் வடமொழிச் சூத்திரத்தில் அசித்து என்றது ஆணவ கன்ம மாயைகளைக் குறிக்குமே எனின் பிரபஞ்சம் என விதந் தோதப்பட்டமையான் அவ்வாறு குறிக்க இயலாது. பிரபஞ்சத்தை மட்டுமே குறித்து நிற்கும்.

இவ்வேறுபாடுகளையும் பொருள் கொள்ளும் முறைமையினையும் ஆறுஞ்சூத்திர விளக்கத்துள் பாடியகாரர் விரிவாக எடுத்துக் காட்டி யுள்ளாரே. ''பாடியம் பன்முறை படிக்க'' என்ற அருள் உப தேசத்தை மேற்கொண்டவர் ஒருமுறையாவது படித்திருந்தால் இவ் வாறு குதர்க்க வாதத்தில் இறங்கியிருக்கமாட்டார்!

கா-93 : சத்தின் சந்நிதியில் அசத்து இன்மையால் அசத்தை சத்து அறியாதென்பது மெய்கண்டார் கூறுவது. அசித்தும் சித்தும் ஒன்றை யொன்று அறியாமையால் சித்தின் சந்நிதியில் அசித்து இல்லை என்று காரிய காரணமுறையைத் தலைகீழாக மாற்றிக் கூறுவது வடமொழி சூத்திரம்.

விடை : ''அசித்து சித்தின் சந்நிதியில் இல்லை ஏனெனில் அந்த இரண்டும் ஒன்றையொன்று அறிவதில்லை'' என்று நேர்மொழி பெயர்ப்பில் கூறினர். ஆனல் ஏனெனில் என்ற இவரது நேர்மொழி பெயர்ப்பிற்கு வடமொழிச் சூத்திரத்தில் சொல் இல்லை. பின்னர் ''ஏனெனில்'' என்ற வார்த்தையை ஏன் சேர்த்தார்? ''உண்மையை மறைப்பதோடு உண்மையல்லாத ஒன்றைக் கூறும் குற்றமும்'' (கா-8) இவர்பால் ஏற்படுகின்றது. அன்றியும் ''வேண்டுமென்றே குலைக்கும்'' (கா-10) குற்றம் ஏற்படுகின்றது.

ஆனல் வடமொழிச் சூத்திரத்தில் காரண காரியமாகவே கூறப் பட்டுள்ளது. பிழைபட்ட நேர்மொழி பெயர்ப்பால் பிழைபடக் குற்றம் போல எழுதினர்.

கா-94 : அசித்து சித்தை அறியாமைக்கும் சித்து அசித்தை அறியா மைக்கும் வடமொழிச் சூத்திரம் வெவ்வேறு காரணம் கூறவில்லே. அசத்து சத்தை அறியாமைக்கும் சத்து அசத்தை அறியாமைக்கும் மெய்கண்டார் வெவ்வேறு காரணம் கூறுகிருர்.

விடை : சித் = அறிவுள்ளது; அசித் = அறிவில்லாதது (சடம்). எனவே சொற்பொருளால் காரணம் பெறப்பட்டது. மெய்கண்டார் சத்து அசத்து என எடுத்துக் கொண்டார். எனவே மூலத்தில் கூறப்பட்ட சொற்பொருளால் பெறப்பட்ட காரணத்தை விதந்து கூறவேண்டிய அவசியம் ஏற்பட்டது. விரித்தல் வழிநூல் மரபுதானே! காரணமுடை யார் வடமொழிச் சொற்களின் பொருளே உணராமையால் ''காரணம் கூறவில்லே'' என்று அறியாது கூறினர்.

கா-95 : சிவாத்துவித சைவர் கொள்கையை மறுத்துச் சித்தாந்தம் சாதிப்பது மெய்கண்டார் திருவாக்கு. வடமொழிச் சூத்திரத்தில் இந்தத் தெளிவு இல்லே.

விடை : சிவாத்துவித சைவர், ''சத்தாகிய பதிப்பொருளே ஆன்மா வின் இடமாக நின்று அறியும்'' என்பர். அதன் பொருட்டு மெய் கண்டார் மேற்கொண்டது ''சத்தே அறியாது'' என்பதாம். வட மொழிச் சூத்திரத்தில் ''அந்த இரண்டும் ஒன்றையொன்று அறிய மாட்டா'' என்று கூறப்பட்டுள்ளது. அதன் பொருள் சித்து அசித்தை அறியாது; அசித்து சித்தை அறியாது'' என்பதாம். அதனையே மெய் கண்டார் தம்மொழி பெயர்ப்பில் ''சத்தே யறியாது அசத்தே அறி யாது'' என்ருர். காரணம் வடமொழிச் சூத்திரத்தில் ''சித்தின் சந் நிதியில் அசித்து விளங்கித் தோன்ருது'' என்று கூறப்பட்டது. வியாபகமாகலின் சந்நிதி என்றது முன்னிலையைக் குறிக்கஇயலாது என்பது சைவ சித்தாந்தம். அசித்து சித்தின் வியாபகத்துள் அடங்கிய தாகலின் முனைத்துத் தோன்ருது. அசித்தென்றதும் சடமென்பது தானே போதரும். இதனையே மெய்கண்டார் ''யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்'' என்றும் அசத்து ''இலது'' என்றும் தம் மொழிபெயர்ப் பிற் கேற்ப இரண்டாகப் பிரித்துக் கூறினர். எனவே வடமொழிச் சூத்திரத்தில் தெளிவு இல்லே என்பது இருவகையையும் விளங்கிக் கொள்ள விரும்பாமையே ஆகும்.

கா-96: இவ்விரண்டையும் அறிபவன் இவ்விரண்டிற்கும் வேருன ஆன்மா என்றே வடமொழிச் சூத்திரம் கூறுகின்றது. ஆன்மா இவ் விரண்டையும் அதற்குரிய காரணம் பலவாதிகளே மறுக்கும் துறையில்

''இருதிறனறிவுளது'' என்று மெய்கண்டாரால் கூறப்படுகிறது. (பாடியம் 452).

விடை: ''பிரபஞ்ச சிவயோர்'' என்பது வடமொழிமூலம். அஃது அநபிகிதம் ஆதலால் இரண்டாம் வேற்றுமைக்கும் ஏழாம் வேற்று மைக்கும் உரிமையுடையது. ''அரசரைச் சார்ந்தான்: அரசர்கட்சார்ந் தான்'' என்ற உதாரணம் பற்றி விளங்கிக்கொள்ளலாம். எனவே எடுத்துக் கொண்ட மூலம், ''பிரபஞ்சத்தையும் சிவத்தையும்'' என்றும், ''பிரபஞ்சத்தின் கண்ணும் சிவத்தின் கண்ணும் என்றும், ''பிரபஞ்சத்தின்பாலும் சிவத்தின்பாலும்'' என மூவகையாகப் பொருள் தந்து நிற்கும். அக்காரணம்பற்றியே ஆசிரியர் மெய்கண்டதேவ நாயனுர் அவ்வழியே மூவகைப்பொருள்பட மொழி பெயர்த்தார். இவ்வாறு அறியாமையால் காரணமுடையார் குற்றம்போல எழுதினுர்.

பாடியத்துள் இருமொழிச் சூத்திரங்களுக்குமே விளக்கம் கூறப் பட்டமையின் மூலத்தில் இல்லாதபொருள் மொழிபெயர்ப்பில் எவ் வாறு கொள்ளப்படும்? மரபு அறியாத காரணத்தால் காரணமுடை யார் மயங்கினுர்.

கா-97: எட்டாம் சூத்திரம்: ''ஸ்தித்வாஸ ஹேந்த்ரியவ்யாதை: த்வாம் நவேத் ஸீதிபோதித, முக்த்வைதாந்குருணு நந்யோதந்ய: ப்ராப்நோதி தத்பதம்'' என்பது. இதன் நேர்மொழிபெயர்ப்பு ''இந்திரிய வேடர் களோடு கூடியிருத்தலால் உனது சொரூபத்தை அறிந்தாயில்லே என்று குருவினுல் தந்யன போதிக்கப் பெற்றவனுய் இவ்விந்திரியங் களாகிய வேடர்களே விட்டுப்பிரிந்து அந்நியமில்லாதவனுய் அப் பதத்தை அடைகிருன்'' என்பது. மெய்கண்டார் திருவாக்கு ''ஐம்புல வேடரின் அயர்ந்தனே வளர்ந்தெனத் தம்முதல் குருவுமாய்த் தவத் தினில் உணர்த்தவிட்டு அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே'' என்பது. வடமொழியில் ''வேடர்களோடு கூடியிருத்தலால்'' என்றுள்ளது. மெய்கண்டார் வாக்கில் ''அயர்ந்தனே வளர்ந்து'' என்பது பல நுட்பமான கருத்துக்களே அடக்கியுள்ளது.

விடை: இவரது நேர்மொழிபெயர்ப்பில் சொரூபம், குரு, தந்யன் முதலிய சொற்கள் மொழி பெயர்க்கப்படவில்லே. பொருள் தெரியாமல் மொழிபெயர்க்கப்படவில்லேயா? அல்லது தமது குதர்க்க வாதத்திற்கு ஏற்புடையதாக இருக்கும் என்ற காரணத்தால் மொழிபெயர்க்காமல் விட்டுவிட்டாரா? அவரது கருத்துப் பரம்பரையினராவது அறிந்திருப் பார்களா? மேலும் எந்த மூலத்திற்கு எப்பகுதி மொழிபெயர்ப்பு என அறிந்து செயலாற்ற ஆர்வமும் இல்லே! எனவே தம் குற்றங்களே நூல்மேல் ஏற்றிக் கூறினுர்!

''ஸஹஸ்தித்வா'' என்பதை ''வளர்ந்து'' என்றும் ''த்வாம் நவேத்ஸி'' என்பதனே ''அயர்ந்தனே'' என்றும் மெய்கண்டார் மொழி பெயர்த்துள்ளார். மேலும் வளர்ந்து என்பதற்கு கூடியிருந் தலேயும், அயர்த்தல் என்பதற்கு மறத்தலேயும் பொருளாகப் பாடி யத்துள் கூறப்பட்டுள்ளன. மேலும் மூலத்துள் காரண காரியமாகக் கூறப்பட்டுள்ளது. அவ்வாறே ''வளர்ந்து அயர்ந்தனே'' என்பதை யும் ஈந்து புகழ் பெற்ருன் என்புழிப் போல காரண காரியப் பொருட் டாய் நின்று'' என்று தான் பாடியத்துள்ளும் கூறப்பட்டுள்ளது. வேருக பல நுட்பமான கருத்துக்களாக எவற்றைக் கண்டார்! அவற்றுள் சிலவற்றையாவது கூறியிருக்கலாம்! அவ்வாறு கூருமை யான் ஏதோ குற்றங் கூற வேண்டும் என்பதற்காகக் கூறியதாகவே ஏற்படும்.

கா-98:- இறைவனே குருவாக வருகின்ருன் என்று மெய்கண்டார் கூறுகிருர். வடமொழி சூத்திரம் கூறவில்லே.

விடை:- ''சிவஞானம் வெளிப்பட்டு விளங்குதலாலே அதுவே ஆசிரி யன். எனவே அங்ஙனம் வெளிப்பட்டு விளங்கிய சிவஞானமே அநுக் கிரகிப்பதன்றி ஆன்மா அநுக்கிரகிக்க மாட்டாதென்னுல் பொருள் எல்லார்க்கும் இனிது விளங்கிக் கிடந்தது. நுமக்கு மாத்திரம் தெரி யாது போதற் கேதுவாய்ப் பொதிந்து நின்ற நும்மறியாமையின் பெருமை வியக்கற்பாலதேயாம். சிவஞானம் வெளிப்பட்டு விளங்கிய ஆன்மா மாட்டு நிகழும் வியாபார மெல்லாம் பேயா லாவேசிக்கப் பட்டவன் மாட்டு நிகழும் வியாபாரம் போலுமென்பது ''பதார்த்தங்கள் பாரார்'' ''பரமே பார்த்திருப்பார்'' எனப்பட்ட மெய்ஞ்ஞானிகள் நிற்கு நிலேயறிய மாட்டாமல் அஞ்ஞான விகற்பத் தால் மாறுகொண்டு பிணங்குகின்ற நீர் அறிதற்கு யார்''

இவ்வாறு சித்தாந்த மரபு கண்டன கண்டனத்துள் காரண முடையாருக்கு விளக்கம் தரப்பட்டுள்ளதே. எனவே குரு என்பதன் பொருளே தம்முதலேத்தான் குறிக்க இயலும். இதுதான் சித்தாந்த மரபு என்பது மேலே காட்டப்பட்டது. வழிநூலாகலான் ''தம்முதல் குருவுமாய்'' என விரித்துக் கூறினர். வழிநூலின் இயல்பு முதல் நூலில் தொகுத்துக் கூறியவற்றை விரித்துக் கூறல்தானே! சைவ சித்தாந்த நூல்களிற் காணப்படுவனவற்றைத் பார்க்கக் கூடாது என்பது இவரது விரதம்போலும்!

கா-99: அவ்வாறு வருவதும் முன்பு செய்தவத்தினுல் என்று மெய் கண்டார் கூறுகிருர், வடமொழியிலில்லே.

விடை: மெய்கண்டார் சூத்திரத்துள் எவ்விடத்து ''முன்பு செய்தவத்தினால்'' என்று கூறியுள்ளார். ''தவத்தினில் உணர்த்த'' என்று தானே கூறியுள்ளார்! சூத்திரத்தில் காணப்படாததையும் எடுத்துக் கூறி மூலத்தில் இல்லை என்று சாதிப்பது இவரையன்றி வேறு யாராலும் இயலாத சாதனையாகும்! இதுதான் "absurdum" ஆகின்றது.

தந்யன் என்ற சொல் செல்வமுடையவனைக் குறிக்கும். ஈண்டு அச்சொல் தவச்செல்வத்தைக் குறித்தது. ''போதித: தந்ய: என்ற பகுதியை மெய்கண்டார் ''தவத்தினில் உணர்த்த'' என்று மொழி பெயர்த்தார்.

கா-100: குருவின் பதத்தை அடைகிறான் என்பது வடமொழி. அரன் கழல் செலும் என்பது மெய்கண்டார் வாக்கு. (இறைவனே குருவாக வருவதை வடமொழி கூறவில்லை என்று மேலே 98-ல் பார்த்தோம்.)
விடை: ''தத்'' என்ற பதம் சிவபெருமானைக் குறிக்கும் என்பது ''தத்துவமஸி'' என்னும் மகா வாக்கியத்தால் அறியலாம். மொழி பெயர்ப்பாளருக்குச் சொல்லின் பொருளைக் காட்டவேண்டிய அவசியம் உண்டு. எனவே ''தத்பதம்'' என்பதனை ''அரன்கழல்'' எனமொழி பெயர்த்தார். காரணமுடையாருக்கு அவ்வாறான பொறுப்பு இல்லை. எனவே தத்பதம் என்பதனை ''அப்பதம்'' என்று நேர் மொழிபெயர்ப்பாகக் கூறினர். அகரமோ மொழி நிறைபில்லாத சுட்டெழுத்து. அவன் முதலியன போன்று சுட்டுப்பெயரல்ல. இலக்கணம் அறியாமையான் சுட்டெழுத்திற்கு இன்னுருபு விரித்து குருவின்பதத்தை என்று பொருள் செய்து இடர்ப்பட்டார்! என்னே நேர்மொழிபெயர்ப்பு!

(இறைவனே குருவாக வருவதை ''தத்'' பதமும் வலியுறுத்தும் என்பதைக் காரணமுடையாரால் அறிந்துகொள்ள முடியவில்லை)

கா-10:- ஒன்பதாம் சூத்திரம், ''சித்திருசா ஆத்ம நித்ருஷ்டவே சம்த்யக்த்வா ஆவ்ருதி மரீசிகாம் லப்த்வா சிவபதச் சாயாம் த்யாயேத் பஞ்சாக்ஷரீம் ஸுதி:'' என்பது. இதன் நேர்மொழி பெயர்ப்பு ''விவேகி ஞான திருஷ்டியால் ஆன்மாவாகிய தன்னிடத்தில் ஈசனைக் கண்டு, கானல் நீர் போன்ற விருத்தியை விட்டு, சிவபதமாகிய நிழலைப் பெற்று பஞ்சாக்ஷரத்தைத் தியானம் செய்யக் கடவன்'' என்பது. மெய்கண்டார் திருவாக்கு, ''ஊனக்கண் பாசமுணராப் பதியை ஞானக் கண்ணினில் சிந்தை நாடி உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்தண்நிழலாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்தே'' என்பது மெய்கண்டார் வாக்கிலுள்ள ''ஊனக்கண் உணராப்பழியை'' என்பது வடமொழியிலில்லை.

விடை:- இதற்கு பாடியத்திலே விளக்கம் தரப்பட்டுள்ளது. அது வருமாறு; ''ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி எனவே ஏனை ஞானங்களான் அறியவாராமை பெறப்படுமாயினும் இனிது விளங்குதற்

பொருட்டு அதனை அநுவாத முகத்தான் ஓதினர்.'' என்னும் பகுதி யாம். எனவே ''ஊனக்கண் பாசமுணராப்பதியை'' என்று அநுவாத முகத்தான் ஓதப்பட்டதை மூலத்தில் இல்லை என்பது விதண்டை யாகும்.

கா-102:- நாடுக என்ற முன்னிலை ஏவல் வடமொழியிலில்லை.

விடை:- நாடுக என்ற சொல் தமிழ்ச் சூத்திரத்திலும் இல்லை. நாடி என்பதே பாடம்'' ''நாடி எண்ணும் எனக் கூட்டி வினையெச்ச முடிபாக வைத்துரைப்பினு மமையும்'' என்றும் பாடியத்துள் காட்டப்பட்டுள்ளதே மூலத்தில் ''கண்டு கணிக்க'' என்று தரப்பட்டுள்ளது. அது ''விழுந்து வணங்கு'' என்பது போல் நிற்கின்றது. அதனை ''விழு,வணங்கு'' என்று இரண்டு வினையாகவும் கூறலாம். அவ்வாறு கூறுவதால் வேறுபாடு காணப்படாது. அதுபோல மூலத்தில் எச்சமுடிபாகக் கூற பட்டதை இரு வினைகளாகக் கூறினர் மெய்கண்டார். இரண்டும் செயலாகவே முடிதலின் மாறுபாடு இல்லை.

கா-103:- உராத்துனைத்தேர் என்பதிலுள்ள வேகக் குறிப்பும் வட மொழியிலில்லை.

விடை:. விருத்தி என்னும் சொற்குறிப்புப் பற்றி வேகக் குறிப்பு வடமொழிச் சூத்திரத்தில் காணப்படுவதே.

கா-104:- பாசம் ஒருவ என்பர் மெய்கண்டார். விருத்தியை விட்டு என்னும் வடமொழி.

விடை : பாசம் என்பது நிலமுதல் நாதமீருகிய மாயாகாரிய வியா பாரமே யாகலின் விருத்தி (பிரபஞ்ச வியாபாரம்) என்பதன் மொழி பெயர்ப்பாயிற்று. எனவே மாற்றம் ஒன்றுமில்லையே! பாடியத்தைப் பன்முறை படிக்க வேண்டியவர் ஒருமுறை படித்திருந்தாலும் தெளிவு காணலாமே. தங்கொள்கைக்கேற்பப் பாசம் என்பதை மும்மலமெனக் கொண்டு மயங்கினர் போலும்!

கா-105 : ஒருவுக என்ற முன்னிலை ஏவலும் வடமொழியிலில்லை. சாதன இயலில் இந்த ஏவல்கள் சாதனங்களைக் கூறுவதால் முக்கிய மானவை.

விடை :- ''ஒருவத் தண்ணிழலாம்''என்று தமிழ்ச் சூத்திரத்தில் எச்ச மாகவே உள்ளது. காரணமுடையார் கனவிற்கண்ட சூத்திரத்துள் அவ்வாறு ஏவலாக உள்ளது போலும்! இவர் ஏவல்கள் இல்லாது செயல்படமாட்டார் போலும்.

கா-106 : தண் நிழல் என்பதிலுள்ள தண்மை வடமொழியிலில்லை.

விடை : நிழலின் இயல்பு தண்மையாகலின் அஃது இயல்பு அடையாகும். எனவே அடைகொடுக்காவிட்டால் தண்மை போய்விடாது. தண்மை எப்பொழுதும் இருப்பதே. முதல்நூலில் தொகுத்துக் கூறுவதை விரித்துக் கூறுதல் வழிநூலின் இயல்புதானே! அம்முறையை இவர் அறியவில்லை என்ருல் இல்லாது ஆகிவிடாது! ஓந்தி கண்ணை மூடினுல் உலகம் இருட்டாகிவிடாது. காழ்ப்புணர்ச்சியால் இவரிடம் தண்மை காணப்படவில்லை.

கா-107 : பத்தாம் சூத்திரம், ''சிவேனைக்கியம் கதஸ் ஸித்த : ததநீந : ஸ்வவ்ருத்திக : மலமாயாத்ய ஸம்ஸ்பருஷ்டோ பவதிஸ்வாநுபூதிமாந்'' என்பது. இதன் நேர்மொழி பெயர்ப்பு ''சித்தன் சிவத்தோடு ஐக்கியத்தை அடைந்தவனுய் அதன் வயமான தன் விருத்தியை உடையவனுய் மலம் மாயை முதலியவற்ருல் பற்றப்படாதவனுய் சுவானுபூதி மானுக ஆகின்ருன்'' என்பது. மெய்கண்டார் திருவாக்கில் ''அவனேதானே ஆகிய அந்நெறி, ஏகனுகி இறைபணி நிற்க மலமாயை தன்ஞெடு வல்வினையின்றே'' என்பது. மெய்கண்டார் திருவாக்கில் சித்தன் சுவாநுபூதிமான் என்ற சொற்களில்லை.

விடை : இவரது நேர்மொழிபெயர்ப்பில் அவர்தம் கொள்கைப்படி பல சொற்களுக்கு மொழிபெயர்ப்பு காணப்படவில்லை. முறையாக மொழிபெயர்த்திருந்தால் குழப்பம் ஏற்பட்டிருக்காது.

தமிழ்ச்சூத்திரத்துள் எழுவாய் இல்லை. எனவே வடமொழிச் சூத்திரத்துள் ''சிவேனைக்யம் கத:ஸித்த;'' என்னும் பகுதியே ஈண்டும் எழுவாயாகக் கொள்ளப்படும்.

சுவாநுபூதிமான் என்பது பற்றிப் பாடியத்துள் விளக்கம் தரப்பட்டுள்ளது. அதுவருமாறு:- ''வடமொழிப் பத்தாஞ்சூத்திரத்திற் பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்திய வழி பாச நீக்க மாத்திரையே முத்தியென்னுஞ் சமயத்தாரை மறுத்தற் பொருட்டுப் பாசநீக்கம் பெற்ருேன் சுவாநுபூதியுடையனுவன் எனப் பதிஞேராஞ் சூத்திரஞ் செய்தற்குத் தோற்றுவாயாந் துணையே செய்துகொண்டு சுவாநுபூதி நிகழ்ச்சிக்கண் ஓதற்பாலன வெல்லாம் பதிஞேராஞ் சூத்திரத்தே கூறிப் போந்தமையின் ஒன்பதாஞ் சூத்திரத்திலெடுத்துக் கொண்ட ஆன்ம சுத்தி பண்ணுமாறு பத்தாஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முடிவு பெற்ருற்போலப் பத்தாஞ் சூத்திரத்திலெடுத்துக் கொண்ட சுவாநுபூதிநிலை பதிஞேராஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுதலென்பதின் மலையாமைப் பொருட்டு ஆசிரியர் சுவாநுபூதிமானுவன் என்பதனையும் அரன் கழல் செலும் எனப் பதிஞேராஞ் சூத்திரத்

திற்றுனே ஒருங்கு வைத்தோதினுராகலின் அது மாறன்மையானும் அவ்வாறன்றி மொழிபெயர்த்தல் யாப்பான் நூல் செய்துரைப்பான் புகுந்த ஆசிரியர் வேறுபடச் செய்துரையார் ஆகலானுமென்க'' என்பது.

''பாடியம் பன்முறை படிக்க'' என்று உபதேசித்த காரணமுடையார் இப்பகுதியையும் நிச்சயம் பார்த்திருக்க வேண்டும்! அவ்வாறு கண்டும் காணுததுபோல் காரணம் காட்டியிருப்பது வஞ்சகமன்றோ. அல்லது சித்தாந்த ஆசிரியன்மார்களைக் காட்டிலும் தான் பெரிய அறிவாளி எனக்காட்டிக் கொள்வதற்காக இவ்வாருன காரணங்களையும் காட்டியுள்ளாரோ! எவ்வாருயினும் பாடியம் பன்முறை படிக்க என்று உபதேசம் செய்துகொண்டே பாடியத்தில் கண்டவைகளை உதாசீனம் செய்வது தன்னை நம்புவோர்களை நிரயத்திற்கு இழுத்துச் செல்லும் நம்பிக்கைத் துரோகமாய் முடியுமே என்பதைச் சிந்தித்தாரல்லர். எனவே ''Reductio ad absurdum'' என்பது இவரால் எழுதப்பட்ட 120 காரணங்கள் என்பதற்கே பொருந்துவதன்றி மெய்கண்டாரை முன்னிட்ட ஆன்றோர் மேற் செல்லா தென்பது திண்ணம்.

கா-108: ஏகனுகி நிற்க இறைபணி நிற்க என்ற ஏவல்களும் பணி என்ற கருத்தும் வடமொழியிலில்லை.

விடை: நிற்க என்பதை ஏவல் எனக்கொண்டார். அச்சொல் நிற்பின் என்ற எச்சப்பொருளாகவே கூறப்பட்டுள்ளது. பாடியத்தை ஒருமுறை பார்த்திருந்தாலே விளங்கிக் கொள்ளக் கூடியதே! ''ஏகனுகி இறைபணி நிற்க'' என்பதே சூத்திரத்திற்கண்டது. எனவே ''ஏகனுகிநிற்க இறைபணி நிற்க என்ற ஏவல்களும் .... வடமொழியிலில்லை'' என்பது பொய்யாகும்.

இவரது நேர்மொழிபெயர்ப்பில் ''அதன் வயமான தன் விருத்தியை உடையவனுய்'' என்று காட்டியுள்ளார். எனவே பணி என்பது அதன் வயமாய் நிற்றல் என்ற விளக்கம் முதன்நூல் சூத்திரத்திலே காணப்படுவது. அதுபற்றியே பணி என்பதற்கு விளக்கம் கொடுக்கப்படுகின்றது. எனவே ''பணி என்ற கருத்தும் வடமொழியிலில்லை'' என்பது நெஞ்சறிந்த பொய்யாகும்.

கா-109: அவனே தானே யாகிய அந்நெறி ஏகனுகி என்பதிலுள்ள பல நுட்பங்கள் வடமொழியிலில்லை.

விடை: பாடியத்துட் காணப்படும் நுட்பங்களெல்லாம் இருமொழிச் சூத்திரங்களுக்கும் பொதுவானது என்பது முன்னரே நாட்டப்பட்டது. எனவே இல்லாத நுட்பங்களை எடுத்துக் காட்டியிருந்தால் அது

காரணமாக இயலும். அவ்வாறு காரணமுடையார் காட்டவில்லை. எனவே காரணம் அவரது கனவில் உதித்த கற்பனையே!

கா-110: வல்வினை என்பதன் பொருள்வளம் வடமொழியிலில்லை.

விடை: ''மலமாயாதி'' என்ற மூலத்திலுள்ள ஆதி என்னுஞ் சொற் குறிப்பால் பெறப்பட்டதை ''வல்வினை'' என்று மொழிபெயர்ப்பாளர் கூறியுள்ளார். முதனூலில் தொகுத்துக் கூறியதை விரித்துக் கூறுவது தானே வழிநூலுக்கு இயல்பு. இதனைக் காரணமுடையார் புரிந்து கொள்ளாது கூறுவதுதான் ''absurdum'' ஆகும்.

பொதுவாக மலம் என்ருல் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும் மலங்களையுங் குறிக்கும் என்றும் சகசமலம் என்ருலே ஆணவத்தைக் குறிக்கும் என்று கா-80ல் கூறினர். ஆனுல் ஈண்டு மெய்கண்டார் பொதுவாக மலம் என்று கூறியிருப்பது காரணமுடையார்க்கு மயக்கத்தைத் தராதது அவரது கருத்துப் பரம்பரையினர்க்குக் கூட ஆச்சரியத்தை விளைவிக்கும்!

கா-111 பதினேராஞ் சூத்திரம், ''த்ருசோதர்சயிதே வாத் மாதஸ்ய தர்சயிதாசிவ: தஸ்மாத்தஸ்மிந் பாரம் பக்திம் குர்யோதாத் மோப காரகே'' என்பது. இதன் நேர்மொழிபெயர்ப்பு, ''ஆத்மா கண்களுக்கு அறிவிப்பது போல அந்த ஆத்மாவிற்கு அறிவிப்பது சிவமாம், ஆதலால் ஆத்மாவிற்கு உபகாரம் செய்கின்ற அச்சிவனிடத்து மேலான பக்தியைச் செய்தல் வேண்டும்'' என்பது. மெய்கண்டார் திருவாக்கு, ''காணுங் கண்ணுக்குக்காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் அயரா அன்பின் அரன்கழல் செலுமே'' என்பது. இங்கே இறைவன் புரியும் காணும் உபகாரம் மெய்கண்டார் வாக்கி லுள்ளது. வடமொழியிலில்லை.

விடை:- பாடியத்துள் வடமொழியிலில்லையோ என்பதற்கு விளக்கம் தரப்பட்டுள்ளது. அது வருமாறு:- ''அற்றேல் பதினேராஞ் சூத்திரத்திற் காட்டுவான் என்பது மாத்திரையே அன்றிக் காண் பான் என்பதும் உடன் கூறிற்றில்லையாலெனின், அறியாது கூறினுய். ஆண்டுக் காட்டுவானும் என்ற உம்மை காண்பானும் என எதிரது தழீஇ நிற்றலிற் கூருமையாண்டையதென்க'' என்பது.

இதனுல் காரணமுடையார் அறியாது கூறியது பெறப்படும். ''பாடியத்தைப் பன்முறை படிக்க'' என்று உபதேசித்தவர் பாடியத்திற் கண்டும் உம்மையை மூலத்திலும் நேர் மொழி பெயர்ப்பிலும்'' காட்டாதது வஞ்சகமுமாகும்.

கா-112:- காட்டுமுளம் போல என்ற உவமையும் வடமொழியிலில்லை

விடை:- ஏன் இல்லை! வடமொழியில் எடுத்துக் காட்டுவமையாகக் கூறியதையே தமிழில் உவம உருபு விரித்துக் கூறினர். எனவே காரணமுடையார் ''வடமொழியிலில்லை'' என்று காழ்ப்புணர்ச்சியால் கூறினுர்.

கா-113:- அயரா அன்பு என்பதிலுள்ள ஆழ்ந்த கருத்துக்கள் மேலான பக்தி என்பதிலில்லை.

விடை:- ''பராம்பக்தி'' என்ற பாடத்தை ''பாரம்பக்தி'' என்று மாறு பாடாகக் கொண்டமையால் ஆழ்ந்த கருத்துக்களைக் காண இயல வில்லை போலும்! அன்பு, பத்தி, காதல் என்பன இச்சை மீதூர்தற் பொருளவாகலின், அது பரமுத்தியினும் உண்டென்பதுணராதார் பத்தியாவது சீவன் முத்தி நிலைக்கே செய்யப்படுமொரு சாதகம் போலுமென மயங்கிக் கொண்டு தமக்கு வேண்டியவாறே உரைப்பர்'' என்று பாடியத்துள் காட்டப்பட்டுள்ளதே! மெய்கண்டதேவநாயனுரும் அயரா அன்பைப் பக்தியென்றே விளக்கியுள்ளாரே. காரணமுடையார் மொழிக் காழ்ப்புணர்ச்சியால் ஆழ்ந்த கருத்துக்களைக் காணமுடியாத வாறு மயங்கினுர் போலும்!

கா-114:- அரன்கழல் செலுமே என்பர் மெய்கண்டார். வடமொழியில் இஃதில்லை.

விடை:- கா-107ன் விடையில் உண்மை காட்டப்பட்டுள்ளது. மேலும் பாடியத்துள் ''வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்துச் சுவாதிபூதி மானுன வன் என்பதனைப் பதினேராஞ் சூத்திரத்துப் பத்தி செய்க என்றதன் பின்னுகக் கொண்டு கூட்டி வைத்துரைப்பதே அதன் கருத்து என்பது தெற்றெனவுணர்ந்து கொள்க; அஃது ஆண்டுக் கூறியவாறுணர்ந்து பத்தி செய்த வழியன்றிப் பெறப்படாமையான்'' என்று வெளிப்படை யாகவே கூறப்பட்டுள்ளதே! பாடியத்தைப் படிக்கச் சொன்னவர் ஈண்டுக் கண்ணை மூடிக் கொண்டதேன்! இவர் கண்ணை மூடினுல் இல்லாது போகும் என்று கருதினுர் போலும்!

கா-115:- பன்னிரண்டாம் சூத்திரம், ''முக்தயை ப்ராப்ய ஸதஸ் தோஷம் பஜேத் வேஷம் சிவாலயம் ஏவம் வித்யாச் சிவஜ்ஞான போதே சைவார்த்த நிர்ணயம்'' என்பது. இதன் நேர்மொழி பெயர்ப்பு ''முக்தியின் பொருட்டுச் சத்துக்களை அடைந்து அவர்கள் திரு வேடத்தையும் சிவலாயத்தையும் பஜிப்பானுக இவ்வாறு சிவஞான போதம் என்னும் இந்நூலில் சைவார்த்த நிர்ணயத்தை அறிக என்பது. மெய்கண்டார் திருவாக்கு'' ''செம்மலர் நோன்றுள் சேர

லொட்டா, அம்மலங்கழீஇ அன்பரொடு மரீஇ, மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே'' என்பது. ''செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலங் கழீஇ'' என்ற பகுதி வடமொழியிலில்லை.

விடை:- பாடியத்துள் ''ஏகனுகி நிற்றலான் மலவாதனை இன்றுகலும் இறைபணி நிற்றலான் மாயா கன்மங்களின் வாதனை இன்றுதலும் பெறப்பட்டமையின், மலமாயைதன்னெடு வல்வினையின்றே'' என்பதனை வேறோ ரதிகரணமாக வைத்து ஓதல் வேண்டாவாயிற்று. அற்றுயினும் அவை இலவாதற்கண் உளதாகிய ஐயப்பாடு முதலியன இறுதிச் சூத்திரத்தின் அம்மலங்கழீஇ என்னும் அதிகரணத்துட் பெறப் படும்'' என்று கூறப்பட்டுள்ளதே. எனவே அதற்குத் தடையாயுள்ளன வற்றை நீக்க வேண்டுதல் அவசியமாகலானும் பத்தாஞ்சூத்திரத்துள் விளக்கப்படாது விடப்பட்ட பகுதியை விளக்க வேண்டுவது அவசிய மாகலானும் ''முக்த்யை'' என்ற மூலத்தை ''செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலங்கழீஇ'' என்று விரித்து மொழிபெயர்த்தார். முதனூலில் தொகுத்து கூறியவற்றை விரித்துக் கூறல் வழிநூலின் மரபு தானே! எனவே இல்லாததைக் கூறவில்லை என்பது தானே பெறப்படும். எனவே காரணமுடையார் கூற்று மரபறியாக் கூற்றாகும்.

கா-116: அன்பரொடு மரீஇ என்பதிலுள்ள நுட்பம் சத்துக்களை அடைந்து என்பதிலில்லை.

விடை:- அந்த நுட்பமாவது யாது? அது எவ்வாறு சத்துக்களை அடைந்து என்பதில் காணப்படவில்லை என்பதை விளக்கினுரில்லை. ஒருக்கால் திருமடத்துள் செல்லும் பேறு கிட்டாத படியாலோ சத்துக்களோடு பழகும் வாய்ப்பு இன்மையாலோ சத்துக்கள் என்பது நுட்பத்தோடு கூறியதாகத் தெரியவில்லை போலும்!

கா-117 : மாலற நேயம் மலிந்தவர் என்பதிலுள்ள கருத்துக்கள் வடமொழியிலில்லை.

விடை : ''மாலற நேயமலிந்தவர் என்பது அம்மலங் கழீஇ யன்ப ரொடு மரீஇனர் எனப்பொருடந்து சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது'' எனப் பாடியத்துட் கூறப்பட்டுள்ளது. சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்ற தொடரில் கருத்துக்களை இவர் கனவிற் கண் டிருப்பார் போலும்!

கா-118 : அரனென என்ற முக்கியமான சொல் வடமொழியிலில்லை.

விடை : மூலத்திலுள்ள சிவம் என்ற சொல்லைப் பிரித்துக் கூட்டல் என்னும் உத்திப்படி அரனெனப் பிரித்து மொழிபெயர்த்தார்.

கா-119 : சீவன் முத்தர்களது அறிவு இச்சை தொழில்கள் வியாபரிக்கும் இடங்கள் இவை என்பதை மெய்கண்டார் நன்கு விளக்குகின்ருர். வடமொழியில் இவ்விளக்கம் இல்லை.

விடை : வியாபரிக்கும் இடங்கள் வேடமும் ஆலயமும் என்ற இரண்டு இடங்களென்றே மெய்கண்ட தேவநாயஞர் கூறுகின்ருர். வடமொழிச் சூத்திரத்திலும் இவ்விரு இடங்களே கூறப்படுள்ளன. அன்பரொடு மரீஇ என்பதையும் ஓரிடமாகக் கொண்டால் மாலறநேயம் மலிந்தவர் என்பதும் அம்மலங்கழீஇ அன்பர் என்பதும் ஒருபொருள் குறித்து வருதலின் கூறியது கூறலாய் முடியும். எனவே தான் பாடியத்துள் மாலற நேய மலிந்தவர் என்றது சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது என விளக்கம் கூறப்பட்டது. இவ்விளக்கங்களை நன்குணராமையான் இக் காரணத்தைக் கூறினர்.

கா-120 : இங்கே ஒரு வினு இயல்பாக இறுதியில் எழும். மெய் கண்டார் திருவாக்கையே மூலமாகக் கொண்டு சிவாக்கிரயோகிகள் மொழிபெயர்த்தார் என்றே வைத்துக் கொண்டால் இவர் ஏன் இத்தனை மாறுபாடுகளைப் புகுத்தினர் என்று ஆராய்வது அவசியமாகும். இதற்குப் பல காரணங்கள் உண்டு. முதன் முதலாக அறிய வேண்டியது சிவாக்ர யோகிகள் சித்தாந்த சைவர் அல்லரென்பது. அவர் சிவாத்துவித சைவம் சிவசமவாதம் முதலிய சில மாறுபட்ட கொள்கைகளை ஆதரிப்பவர் என்பதை அவருடைய சித்தியார் உரை சிவநெறிப் பிரகாசம் முதலியவற்ருல் அறியலாம். தமது கொள்கைக்கேற்ப மொழி பெயர்ப்பது இயல்பு. இரண்டாவதாக நாம் எண்ண வேண்டியது முப்பத்திரண்டெழுத்துக்களே உள்ள சூத்திரம் ஒவ்வொன்றில் மெய் கண்டார் நுட்பங்களை யெல்லாம் அடக்குவது இயலாது. கூடியவரையில் பொதுவாக மெய்கண்டார் கருத்தை அறிவிக்கும் வடமொழி சுலோகங்கள் (rough and ready translation) என்ற எண்ணங் கொண்டே மொழிபெயர்த்தார் என்று கொள்ளலாம்.

விடை : இங்கே இயல்பாக எழக்கூடிய வினு இதுதான். ''வடமொழி தமிழ் மொழிகளில் நல்ல புலமையுடைய சிவாக்ர யோகிகள்'' என்று காரணமுடையாரே புகழ்ந்துள்ளார். ஆயின் காரணமுடையாருக்கோ வடமொழி தமிழ் மொழிகளில் புலமை இல்லை என்பது 119 காரண ஆய்வுகளால் வெட்ட வெளிச்சம் ஆகின்றது. எனினும் இவருங் குற்றங் கூறும் படி மொழிபெயர்த்தார் என்பது உண்மையாகுமோ என்பதுதான் அவ் வினுவாக இருக்க முடியும்!

எனவே காரணமுடையார் சிவாக்ரயோகிகளை நல்ல புலமையுடையவர் என்று தட்டிக்கொடுப்பது அவரது நெஞ்சறிந்த பொய்யாகும். மேலும் நடுவு நிலையில்நிற்க விரும்புவோர்களும் சிவாக்கிர

யோகிகளே மொழிபெயர்த்தார் என்பதை உடன்படவில்லை என்பதை ஆங்கில முகவுரையால் அறியலாம். அன்றியும் காரணமுடையாரே, ''சிவாக்ர யோகிகள் மொழிபெயர்த்தார் என்றே வைத்துக் கொண்டால்'' என்று எழுதுவதால் சிவாக்ரயோகிகளே மொழி பெயர்த்தவர் என்பதும் அவருக்கும் உடன்பாடில்லை என்பது நன்கு அறியப்படும். எனவே ''பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே ''என்பது இவரது கொள்கை யாகும் என்பதும் அக்கொள்கையின் வெள்ளோட்டமே ''120 காரணங்கள்'' என்பதும் வெளிப்படையாகும்.

இவர் ஏன் இத்தனை மாறுபாடுகளைப் புகுத்தினார் என்று ஆராய்வது அவசியமாகும் என்றார். சிவாக்கிர யோகிகள் மொழிபெயர்க்கவில்லை என்பதை உடன்பட்டவர் ''ஆராய்வது அவசியம்'' என்பது மிகப் பெரிய வேடிக்கையாகும்! 119 காரணங்களாலும் காரணமுடையாரே மாறுபாடுகளைப் புகுத்தியவர் என்பது நன்கு விளங்கவும் சிவாக்கிர யோகிகளே மாறுபாடுகளைப் புகுத்தினார் என்று கூறிப் ''பொய்யுடை ஒருவன்'' என்ற தங்கொள்கையை வெளிப்படுத்திக் காட்டினார் என்பது போதரும்.

மேலும் பல காரணங்கள் உண்டு என்றவர் இரண்டு மட்டுங் கூறி சிலவற்றோடு விட்டுவிட்டார்! அது ''மீசையில் மண் ஒட்ட வில்லை'' என்பது போல் முடிந்தது! அந்த இரு காரணங்களாவது பொருந்துமா என்பதைக் காணலாம்.

காரணமுடையார் தம்மைச் சித்தாந்த சைவத்தைக் கரைகண்டு அநுபவமுடையாராகக் கருதிக் கொண்டு சிவாக்கிர யோகிகள் சித் தாந்த சைவர் அல்லர் என்றார். இவர் சித்தாந்த சைவராயின் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் கூறிய அளவைகளைப் பின்பற்றி யன்றோ காரணக்கணைகளைத் தொடுத்திருக்க வேண்டும். காட்சியளவை ஒன்றை மட்டும் கைக்கொண்டு அருணந்தி சிவசாரிய சுவாமிகள் கூறிய மற்றைய அளவைகளை எல்லாம் திலதர்ப்பணம் செய்தார்! எனவே தான் மேலைநாட்டுத் தர்க்கமுறைக்கு ஓடினார்! கருதல் உரை யளவைகளைக் கைவிட்ட இவர் உலகாயதக் கொள்கையினர் என்பது வெளிப்படை.

சித்தாந்தசைவர் அல்லர் என்பதற்குக் கண்டு காட்டிய காரணம் மிகவும் வேடிக்கையானது. அக்காரணமாவது, ''சிவாத்துவிதசைவம் சிவசமவாதம் முதலிய சில மாறுபட்ட கொள்கைகளை ஆதரிப்பவர்'' என்பது. சிவாக்கிர யோகியை ஒன்று சிவாத்துவிதி என்றோ அல்லது சிவசமவாதி என்றோ யாதாவதொன்றைத் துணிந்து கூறியிருக்க வேண்டும். அறிவுடைய ஒருவர் ஒரு சமயக் கொள்கையை ஏற்று

அதனை மேற்கொள்ளுவதே நடைமுறையாகும். ஆனால் சிவாக்கிர யோகிகளோ மாறுபட்ட பல சமயக் கொள்கைகளை ஆதரிப்பவர் என்றார். ஏன் அவ்வாறு கூறினர்? காரணமுடையாருக்கு சிவாக்கிர யோகிகள் கொள்கை இதுவெனக் காணும் பொறுமையில்லை. அறிஞர் களைக் கேட்டேனும் தெரியலாம். அதற்கும் பொறுமையில்லை. எனவே தம்மைப்போலவே அவரும் இருந்திருக்க வேண்டும் என்ற கருத்தினால் அவ்வாறு கூறினர் போலும். இஃது இவரது பொய் கூறும் வன்மைக்கு எடுத்துக்காட்டு! சிவாக்கிர யோகிகள் கொள்கையையே இன்ன தென்று அறிய இயலாத இவரா சைவ சித்தாந்த உண்மைகளைக் காண வல்லவர்!

ஞான நூல் வந்த பாரம்பரியத்தைச் சந்தான குரவர்களே கூறி யுள்ளார்கள். அவர்கள் கூறியதெல்லாம் பொய் என்றார். சந்தான குரவர்களையே பொய்மையாளர்கள் என்றவர்க்கு அம்பலவாண தேசிகர், உலகுடைய நாயனர் சிவஞான சுவாமிகள் முதலிய சீவன் முத்தர்கள் எல்லாம் உண்மையைக் கூறவில்லை என்று சொல்வது பெரிய காரியமா? தம்மைத் தவிர மற்றவர்களை எல்லாம் பொய்மை யாளர்கள் என்று கூறத்துணிந்த பெருமகனர்! ஆயின் பொய்மை யாளர்கள் கூறிய சைவசித்தாந்தம் எப்படி இவருக்கு உண்மை யாயிற்று! ''நாம் சொல்லுகிறோம் நீர் நம்பும்'' (கா-46) என்றது இவரது அடிப்படைக் கொள்கை போலும்.

காரணமுடையார், ''இரண்டாவதாக நாம் எண்ணவேண்டியது முப்பத்திரண்டு எழுத்துக்களே உள்ள சூத்திரம்'' என்றார். ''வடமொழி வழக்கில் வசனத்துணுக்குகளுக்குத்தான் சூத்திரம் என்ற பெயர் உண்டு (bits of brose). பௌஷ்கரம் மிருகேந்திரம் வடமொழிச் சிவஞான போதம் முதலிய நூல்களிலுள்ள செய்யுள்களைச் சுலோகம் என்றும் இவைகளடங்கிய நூல்களைக் காரிகை என்றும் கூறுவதே வடநூல் வழக்காறு'' (கா-54) என்று அறுதியிட்டுக் கூறினர். ஆனால் 120வது காரணத்தில் 54வது காரணத்திற் கூறியதை மறந்து சுலோகத்தை யும் கைவிட்டார்! சூத்திரம் என்றே உடன்பட்டார்! 54வது காரணத் திற் கூறியவைகள் பொய்யா? 120 வது காரணத்திற் கூறியது பொய்யா? 120 காரணங்களுமே பொய்யாய் முடியும் போது இவை இரண்டும் தானா முக்கியம்!

பாடியகாரரே பாடியத்துட் கூறப்பட்டவை இருமொழிச் சூத்திரங் களுக்குமே என்று அறிவித்த பின் ''மெய்கண்டார் நுட்பங்களை யெல்லாம் அடக்குவது இயலாது'' என்று இவரை யன்றித் துணிந்து பொய்கூற முடியாது.

''சிவாக்கிர யோகிகள் மொழிபெயர்த்தார் என்றே வைத்துக் கொண்டால்'' என்று எடுத்து ''rough and ready translation என்ற எண்ணங்கொண்டே மொழிபெயர்த்தார் என்று கொள்ளலாம்'' என முடித்தார். சிவாக்கிர யோகிகளை மொழிபெயர்ப்பு ஆசிரியராகக் கொள்வது மிகையாகும் என்ற ஆங்கில முகவுரை கொண்டே காரண முடையாரது கொள்கை பிழைபட்டதாகும் என்பது தெள்ளத்தெளிவு. பின் ஏன் இவ்வாறு கூறினர்? ஒரு மொழியின் பாற்பட்ட காழ்ப் புணர்ச்சியே காரணம். அதனைக் காட்டாமல் மறைக்க மற்றொரு மொழியுணர்ச்சியை எழுப்ப வேண்டும். எனவே தான் ''மொழி பெயர்ப்பல்ல'' என்ற தொடரைக் கைக்கொள்ளவேண்டிய நிலை ஏற் பட்டது. குரோத உணர்ச்சி வசப்பட்டு உண்மையை மறைப்பது பெருமையாகாது. சற்றுப் பொறுமையைக் கைக் கொண்டிருந்தால் இவ்வாறு விபரீத முடிவுகளை மேற் கொண்டிருக்க மாட்டார்கள். அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் உலகாயதன் மதமறுதலையுள் ஒரு அருமையான அறிவுரை கூறுகின்ருர். அஃதாவது, ''குரோத மேகுண மாயிருந்தவர் சாந்தி நன்மை குறிக்கொளார் - அராக மேயணை வார்களாசையறுத்த வின்ப மறிந்திடார்'' என்னும் பகுதியாகும். இதன் பொருளாவது, ''கோப மிகுதியைக் குணமாகக் கொண்டவர் பொறையினுல் உண்டாம் நன்மையை அறியமாட்டார்கள்; அராகத் தையே பற்றி நிற்பவர் ஆசையை விட்டு நீங்கியதால் உண்டாம் சுகத்தை அறிய மாட்டார்'' என்பதாம். இந்த உரையை அவர்கள் படித்திருந்தால் விபரீத முடிவுகளை மேற்கொள்ளாமல் பொறுமையை மேற் கொண்டிருப்பார்கள்.

எனவே இதுகாறுங் கூறியவாற்ருல் ஐயப்பாடுடையார், விபரீத வுணர்வுகளிலிருந்து விடுபட்டு மெய்கண்ட தேவநாயனுர் காலமுதல் நிலவிவரும், ''முழு முதற் கடவுளான சிவபெருமானை ஆசிரியராகக் கொண்ட ஆகமப் பகுதியான சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்பே மெய்கண்ட தேவ நாயனுரை ஆசிரியராகக்கொண்ட சிவஞான போதம்'' என்னும் உண்மையையும் சந்தான குரவர்களால் கூறப்பட்ட உண்மைகளையும் கைக்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

---

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.
ஸ்ரீமத்சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க.

# பிற்சேர்க்கை

தற்காலத்தில் தங்களது கொள்கையை நிலைநாட்ட ஏதும் செய்ய லாம் என்றும் ஆராய்ச்சி என்ற பெயரால் எதையும் கூறலாம் என்ற நிலை ஏற்பட்டுள்ளது.

I 1923ம் ஆண்டு வெளிப்பட்ட சித்தியார் - இருவர் உரையுள் (கழகப்பதிப்பு) மெய்கண்டானூல் என்பதற்குப் பதவுரை ''மெய்கண்ட தேவன் மொழிபெயர்த்துரைத் தருளிச் செய்த சிவஞான போதநூலை'' என்று காட்டப்பட்டுள்ளது. தற்காலப் பதிப்பில் அப்பதவுரை. ''மெய்கண்ட தேவநாயனுர் அருளிச்செய்த சிவஞானபோத நூலை'' என்று மாற்றப்பட்டுள்ளது. பொழிப்பும் அவ்வாறே மாற்றப்பட்டுள்ளது.

II சிவஞான போதம் தமிழ் முதல்நூலா மொழிபெயர்ப்பு நூலா என்பது பற்றிய ஆய்வு; ''சிவஞான பாடியத் திறவு'' என்ற புத்தகத்திலே கண்டபடி.

(1) இவையெல்லாம் சிவஞானபோதம் என்னும்நூல் தமிழ் முதல் நூலா அல்லது மொழிபெயர்ப்பு நூலா என ஆராய்வோர் உளங் கொளத் தக்கவை. அவ்வாராய்ச்சியை யான் இங்கு எடுத்துக் கொள்ளாமையின் இம்மட்டில் நிறுத்திக் கொள்கிறேன். (பக்-4)

(2) இதனுல் சிவஞானபோதம் எக்காலத்திற்கும் எவ்விடத் திற்கும் பொருந்தும்படி எழுதப்பட்ட முழு முதல்நூல் என்பது தெளியப் படும். (பக்-18)

(3) சிவஞான போதம் என்னும் ஞானநூல் வேதம் சிவாகமம் என்னும் முதல் நூல்களிலும், திருக்குறள், பன்னிருதிருமுறை என்னும் தமிழ் மறைகளிலும் கூறப்படும் பொருள்களை இறை உயிர் தளை என மூன்ருகப் பகுத்து எடுத்துக்கொண்டு அவற்றின் உண்மையினையும் இயல்பினையும் முன் ஆறு சூத்திரங்களால் ஆராய்ந்து தெரிவிக் கின்றது. (பக்-19)

---

(4) இவ்வாராய்ச்சியால் முதல்வனுக்கும் உயிர்களுக்கும் பிறப்பு நிலை வீட்டு நிலை இரண்டு நிலையிலும் உள்ள சம்பந்தம் ஒன்ருய் வேருய் உடனுயிருத்தல் எனக்கூறப்படும் என்பதும் அக்கருத்து மகா வாக்கியப் பொருள் பற்றியே கூறப்படுகின்றது என்பதும், அத்துணிவு திருஞான சம்பந்தர் வாய்மொழியை அடிப்படையாகக் கொண்டது என்பதும் அக்கருத்தையே மெய்கண்ட தேவர் இரண்டாம் சூத்திரத்தில் வைத்துத் தொடங்குகிருர் என்பதும் இனிது விளங்கும். (பக்-47)

(5) இங்கு ஆராயப்படும் மூலம்மறை சாந்தோக்கிய உபநிடதத்தில் ஆறும் அத்தியாயத்தில் வருவது. (பக்-48)

(6) அதற்கு மெய்கண்ட தேவர் பின்வருமாறு விடை கூறுகின்றார். அகரமாகிய உயிர் இல்லையானால் எழுத்துக்கள் இல்லை என்னும் முறையில் முதற்பொருள் இல்லையானால் ஒரு பொருளும் இல்லை என்று வேதம் கூறுகின்றது. (பக்-52)

(7) நீர் வழிப்படும்உம் புணைபோல் ஆருயிர் முறைவழிப்படுஉம் என்பது திறவோர் காட்சியில் தெளிந்தனம் எனக் கணியன் பூங்குன்றனார் என்னும் நல்லிசைப் புலவர் கூறுகின்றார். அதனை உடம்பட்டு மேலும் சில உண்மைகளை வரையறை செய்து உணர்த்துகிறார். (பக்-55)

(8) கேனோபநிடதம் என்றாற்போலச் செந்தமிழ் வடமொழி இரண்டிலும் மறைகளில் இயலும் கருத்தினை மறத்தல் கூடாது என்கிறார். (பக்-108)

(9) இம்மந்திரப் பொருள் (சுவேதாசுவதரம் ஆறும் அத்தியாயம் எட்டாம் மந்திரம்) இங்குள்ள மூன்றாவது வெண்பாவோடு புடைபட வைத்து நோக்கத்தக்கது. (பக்-109)

(10) இந்தப் பரமுத்தி நிலையை உடம்பு உள்ளபோதே தலைப்பட்டோரே சீவன் முத்தர் எனப்படுவர். "தலைப்பட்டார் தீரத்துறந்தார்". அன்னவரே சித்தாந்த சைவத்தில் ஆசாரியர் எனக்கொள்ளப் பெறுவர். அவர் இறைவன் ஆணையால் இயற்றி வைக்கும் தோத்திர சாத்திரங்களே தலையாய பிரமாண நூல்கள். பன்னிரு திருமுறைகளும் திருவுந்தி திருக்களிற்றுப்படி என்னும் நூல்களும் தலையாய பிரமாண நூல்கள். (பக்-173)

(11) மெய்கண்டதேவர் இரண்டாண்டில் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்து சிவபெருமான் திருவருளைப்பெற்றுத் திருக்கயிலாய பரம்பரையில் வந்த பரஞ்சோதி முனிவர் அருள் உபதேசம் பெற்று அவ்வூர்த் திருக்கோயிலில் உள்ள பொல்லாப் பிள்ளையார் சந்நிதியில் எழுந்தருளிச் சிந்தித்துத் தெளிந்து சுவாநுபவம் பெற்றுச் சைவ சித்தாந்த முதனூலாகிய தமிழ்ச் சிவஞான போதத்தை இயற்றித் தக்க மாணுக்கர்களுக்கு உபதேசித்து வந்தவர். (மெய்கண்டார்-மலர்-1 இதழ்-2-பக்-9)

(12) சிவஞானபோதம் என்பது எல்லா வேதங்களின் சாரமாகத் தமிழில் மெய்கண்டார் என்னும் பெரியார் 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் செய்தநூல். இது பிரம்ம சூத்திரம் என்னும் வியாச சூத்திரத்தின் சாரமாய் உள்ளது என்று உணர்தல் வேண்டும். (சிவ ஞான பூஜாமலர்-1982-பக்-114)

இந்தப்பன்னிரு பகுதிகளும் ஒரே ஆசிரியரால் கூறப்பட்டவை என்பது கவனத்திற்குரியது!

III ''சிவஞானபோதமும் - சிற்றுரையும்'' என்றநூல் ''நுண்பொருள் விளக்கத்துடன்'' ஸ்ரீ ஆதிகுமரகுருபரசுவாமிகள் 296-ம் ஆண்டு குருபூசை வெளியீடு 15-3-84இல் திருப்பனந்தாளிலிருந்து வெளியாயிற்று. அதன்கண் பதிப்பாசிரியரது ''ஆராய்ச்சி முன்னுரை'' ஒன்று 76 பக்கங்களில் உள்ளது. சிற்றுரை ஆசிரியராகிய மாதவச் சிவஞான சுவாமிகளை 120 காரணமுடையார் சுருத்துப் பரம்பரையினராக நின்று பதிப்பாசிரியர் குற்றப்படுத்துகிறுர். முன்னெடு பின் முரணுவன முன்னுரையில் பலவுள. ஒன்று வருமாறு:-

தமிழ் வழியதாம் தகைமை . . . 5. இவ்வாறு உலகைப் படைத்த சிவபெருமான் பின் தம்மால் அனைத்தையும் ஒடுக்கிக் கொள்ளும் வல்லமையும் தலைமைச் சிறப்பும் உடையன் எனச் சைவசித்தாந்தம் கூறுகிறது. சிவஞான முனிவர் சிவபெருமானை ''ஒடுங்கி'' என்ற சொல்லாலும் குறிப்பார். ''தொல்லூழி தருமாறித் தொகல் வேண்டும் பருவத்தால் பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான் போல்'' எனவரும் கலித்தொகை இக்கருத்தொடு இயைபுபடுகின்றமை அறியலாம்.

(ஆராய்ச்சி முன்னுரை பக். 5)

இவர் உரையில் மேலும் எண்ணித்துணிதற்குரிய சில இடங்களும் உளவாதலைக் குறிப்பிடாமல் இருத்தற்கில்லை 1) சிவஞான போதம் தனித்தமிழ்முதல்நூலாயினும் இவர் வடமொழியின் வழியது எனக் கருதி ஆங்காங்கு வலிந்து கூறியிருப்பன.

(4) முதல் நூற்பாவில் ஒடுங்கி என்பது பெயர் எனக் கொண்டு உரைப்பது.

(ஆராய்ச்சி முன்னுரை பக். 76)

# பிழைதிருத்தம்

| பக் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 31 | கருதிசிவா | சுருதி சிவா |
| 2 | 14 | வேதாங்களு | வேதாங்கங்களு |
| 3 | 10 | முதனூலாகிய | முதனூலாகி |
| 6 | 32 | தெரிந்தெடுத் | தெரித்தெடுத் |
| 9 | 13 | முதல்வடீன | முதல்வனே |
| 9 | 16 | மட்டுமின்றி | மட்டுமன்றி |
| 11 | 10 | முடிவுகளே | முடிபுகளே |
| 14 | 26 | நூலும் | நூலுள் |
| 15 | 14 | மரபை | மரபைப் |
| 16 | 2 | உணர்த்துற் | உணர்த்துதற் |
| 16 | 4 | திறுதீயிற் | திறுதியிற் |
| 21 | 4 | சங்கார காரணஞகிய இவ்வுலகம் | சங்காரகாரணஞகிய....... இவ்வுலகம் |
| 21 | 30 | கோதிலரும் | கோதிலருட் |
| 23 | 17 | பெறப்படும் | பொருந்தாது |
| 24 | 1 | என்பது | எண்பது |
| 24 | 29 | வெளிப்படை | வெளிப்பட |
| 25 | 10 | full graphic | full and graphic |
| 25 | 38 | யெனுபவர்கட் | யெனுமவர்கட் |
| 25 | 38 | இறைவனருனந்தி | இறைவனருணந்தி |
| 27 | 31 | போதையர் | பேதையர் |
| 35 | 24 | வடமொழியையே | வடமொழியையோ |
| 36 | 29 | விளங்குவதாய் | விளக்குவதாய் |
| 37 | 3 | ொதுவாகச் | பொதுவாகச் |
| 37 | 32-33 | ஒட்டச் | ஒட்டிச் |
| 39 | 16 | on | to |
| 43 | 31 | பாடியர் | பாடியப் |
| 44 | 23 | என்புதனை | என்பதனை |
| 50 | 30 | உயர்தினேப் | உயர்திணேப் |
| 50 | 31 | அவ்விரண்டும் | அவ்விரண்டுக்கும் |
| 51 | 15 | விளக்கப்படுதலை | விலக்கப்படுதலை |
| 51 | 17 | வியாகப் | வியாபகப் |
| 53 | 12 | அறிதன் | அறிதலின் |
| 55 | 15 | சூத்திரம | சூத்திரம் |
| 56 | 12 | விரிகா | விகாரி |

| | | | |
|---|---|---|---|
| 57 | 1 | சொல்வண்மையால் | சொல்வன்மையால் |
| 59 | 8 | என | எனக் |
| 62 | 20 | உபேமித | உபேமித: |
| 62 | 35 | நவித்த | நவித்த: |
| 65 | 18 | ஸீதிபோதித | ஸீதிபோதித: |
| 66 | 8 | நின்று | நின்றது |
| 66 | 17 | மாட்டாதென்னுல் | மாட்டாதென்னும் |
| 67 | 34 | உணராப்பழியை | உணராப்பதியை |
| 16 | 32 | தாரணியேரர் | தாரணியோர் |
| 19 | 6 | வளா | வாளா |
| 19 | 20 | நூதலிற்று | நுதலிற்று |
| 11 | 2 | தென் குமாி | தென் குமரி |
| 13 | 36 | நூலில் | நூலின் |
| 25 | 36 | பரபக்யத்தின் | பரபக்கத்தின் |
| 38 | 6 | உன்னயாணிஸங்கி | உன்னயாணிங்கி |
| 57 | 29 | என் | என்று |
| 75 | 19 | உறி | உறிச் |

உ
சிவமயம்

# சிவஞானபோதம் வழிநூலே

சந்தான குரவர்களிற் சிவஞான
போதம்வட மொழியாற் சாற்று
நந்தீசர் சனற்குமர பகவான்சத்
தியஞான நலத்தோ னின்பப்
புந்திபெறு பரஞ்சோதி மாமுனிக
டிருவடியைப் புகழ்ந்து போற்றிச்
சிந்தைமகிழ்ந் தார்வமுறத் தினந்தினமு
நினைந்துருகிச் சிந்தை செய்வோம்.

தமிழ்நூலா லந்நூன்முன் னூலாக்கு
மெய்கண்டான் சரணம் போற்றி
திமிரமகற் றிடுகதிர்போல் வழிநூல்செய்
யருணந்தி திருத்தா ளேத்திச்
சுமையுடனே யகற்றுதிரு மறைஞான
சம்பந்தர் துணைத்தாள் வாழ்த்தி
யமுதெனச்சார் பருணூல்சொ லுமாபதிதே
வன்றிருத்தா ளடைந்துய் வாமே.

[இவ்விரு செய்யுட்களும் திருவாவடுதுறையாதீனக் குருபரம்பரை விளக்கம் என்னும் நூலில் பக்கம் 38-இல் உள்ளன. இதனால் சிவஞானபோதம் வடமொழியிலிருந்தது, மெய்கண்டார் அதனை மொழிபெயர்த்தார் என்பது பெறப்படுகிறது.]

